ரூ. 8.00

திருவள்ளுவர் ஆண்டு 2045 ஆடி - புரட்டாசி
ஜூலை - செப்டம்பர் 2014

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்



10-9-2014 குருபூசை விழாவில்
தமிழாகரர் முனைவர் கு.ஞானசம்பந்தன்
அவர்கள் பாராட்டுப்பெறுதல்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின்அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | ½ பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

**சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :**

நிர்வாகி

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி – 630 206

சிவகங்கை மாவட்டம்

தொலைபேசி எண் : 04577 – 264227

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும்
மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும்
அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி



மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2045 மாதம் : ஆடி - புரட்டாசி

மலர் : 29 இதழ் : 7 - 9

உ

# அடிகள் உளம் வியந்த மூவர்

வாளால்மகவு அரிந்து ஊட்டவல்லேன் அல்லேன், மாது சொன்ன
சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லேன், தொண்டு செய்து
நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன் நான் இனிச்சென்று
ஆளாவது எப்படியோதிருக் காளத்தி அப்பருக்கே!

என்று அனைத்தும் துறந்த பட்டினத்தடிகள் உளம் வியந்து பாடிய மூன்று அடியார் பெருமக்கள்.

★ தம் மகனின் புலாலை அடியவராய் வந்த சிவபெருமானுக்குப் படைத்திட்ட பெரிய சிறுத்தொண்டர்,

★ தம் மனைவியுடன் ஏற்பட்ட பிணக்கால் புன்புலால் யாக்கை இது என்று உடல் இன்பம் துறந்து உயிர் இன்பமாகிய சிவத்தை, திருநீலகண்டத்தை சதாசர்வகாலமும் சிந்தித்த திருநீலகண்டர்,

★ பன்றியின் புலாலைச் சுவைத்து உண்ணலாம் என்று பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து அமுது ஊட்டிய கண்ணப்ப நாயனார்

இந்த அடியார் பெருமக்களை பட்டினத்து அடிகள் பாடுகின்றார்.

**வாளால்மகவு அரிந்து ஊட்டவல்லேன் அல்லேன்,**

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்;

கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி;
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்;

வீடுபேற்றைக் கூட விரும்பாதவராய் அடியார் பெருமக்கள் ஆற்றிய தொண்டு! சிவத்தை சிந்திக்கும் சிந்தை! சிவனடியார்களைப் போற்றும் நெஞ்சம்!

பூசும் நீறு போல் உள்ளும் புனிதராய்,
பாரம் ஈசன்பணி யலது வேறு ஒன்று இலார்

என்று பணியாற்றிய அடியார் பெருமக்கள் பலர்! அவர்களுள் சிறுத்தொண்டர் என்று அழைக்கப்பட்ட அடியார் "பரஞ்சோதியார்" என்ற இயற்பெயரில் பல்லவ மன்னனிடத்தில் அமைச்சராய் இருந்து அரும்பெரும் பணியாற்றியவர்; போரில் வெற்றியைத் தவிர வேறு அறியாதவர்; பகைநாட்டின் யானைகளை, குதிரைகளை, செல்வங்களை கொண்டு வந்து குவித்தவர்; எவரும் எதிர்க்க இயலாத மாபெரும் வெற்றி வீரராக விளங்கிய பரஞ்சோதியாரை, சிவனடியார் என்று அரசன் அறிந்து இனி போர்த்தொழில் விடுத்து சிவத்தொண்டு செய்ய வேண்டினான்.

அதையேற்று பரஞ்சோதியாரும் திருச்செங்காட்டங்குடியில் திருத்தொண்டராய் சிவத்தொண்டு புரிந்து வந்தார்.

அவர் திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சுரப் பெருமானை வழிபட்டு, நித்தம் அடியவர் உணவு அருந்திய பின் உணவு அருந்துவது வழக்கம். அடியவர்களுக்குத் தாம் சிறியராய் - அடியவராய் இருந்து திருத்தொண்டு புரிந்ததால் "சிறுத்தொண்டர்" என அழைக்கப்பெற்றார். இறைவன் வயிரவர் திருக்கோலத்தில் அவரின் அன்பை நுகர ஆர்வங்கொண்டு அவரைச் சோதனைக்கு உட்படுத்துகின்றார். வயிரவர் வேடந்தாங்கி வந்த அடியவரை அமுது உண்ண வேண்டும் என்று சிறுத்தொண்டர் வேண்ட,

"
...................................
நாம் உண்ணப்
ப்டுக்கும் பசுவும் நரப்பசுவாம்
உண்பது அஞ்சு பிராயத்துள்
உறுப்பில் மறுஇன்றேல் இன்னம்
புண் செய் நோவில் வேல் எறிந்தால்

போலும் புகல்வது ஒன்று" என்றார்.

தொடர்ந்து,

"..................................

ஒரு குடிக்கு
நல்ல சிறுவன் ஒரு மகனைத்
தாதை அரியத் தாய் பிடிக்கும்
பொழுதில் தம்மில் மனம் உவந்தே
ஏதம் இன்றி அமைத்த கறி
யாம் இட்டு உண்பது" என மொழிந்தார்.

உறுப்பில் பழுதில்லாதவனை, ஐந்து வயதுக்குள் ஒரு குடிக்கு ஒரு மகனாய் உள்ளவனை, தாய் உவந்து பிடித்துக்கொள்ள, தந்தை உவந்து அரிதல் வேண்டும். இவ்வாறு அரிந்து சமையல் செய்தால் நாம் உண்போம்" என்றார்.

பொருளுக்குப் பிள்ளை தருவார் உண்டு. தாமே தம் பிள்ளையை அரிந்து சமைத்துத் தருவார் உண்டோ? எனவே, ஒரு கணமும் யோசியாது தம் அருமை மகன் ஒரே மகனை, செல்வப் பெருங்கொழுந்தை, நாளும் சீராட்டி வளர்த்த சீராளனை அடியவர் அமுது செய்ய உணவாக்கினார். நினைத்துக்கூட பார்க்க முடியாத அச்செயலை "அரும்வினை செய்தார்" என்று சேக்கிழார் கூறுவார்.

தம் அருமை மகனைச் சிறுத்தொண்டரும், அவரது துணைவியாரும் அமுதாய்ப் படைக்க. வயிரவரோ, "உங்கள் மகனையும் அழையும். அப்பொழுதுதான் உண்போம்" என்றார்.

"செய்ய மணியே! சீராளா!
வாராய்! சிவனார் அடியார் யாம்
உய்யும் வகையால் உடன் உண்ண
அழைக்கின்றார்" என்று ஓலம் இட,

பள்ளி சென்ற குழந்தை திரும்பி வருவதைப் போல் வந்தான் செல்வமைந்தன் "சீராளன்".

பிள்ளைக் கறி அமுது வேண்டி நம் இதயம் எல்லாம்

பிசைந்த பெருமான், சிறுத்தொண்டரின் சிவத்தொண்டை உலகுக்கு உணர்த்தக் கல்லைக் கனியாக்குவதுபோல் தம் கருணையை வெளிப்படுத்தினார்.

**மாது சொன்ன சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லேன்,**

திருநீலகண்டர் தம் வாழ்வில் - இன்ப வாழ்வில் ஒருமுறை தடுமாறியவுடன், அவர் தம் துணைவியார் "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்" என்றார். தாம் உயிராய்க் கொண்டுள்ள திருநீலகண்டத்தின் மீது எம்மைத் தீண்டுவீராயின் என்று பன்மையில் சத்தியம் செய்தவுடன், எந்த இன்ப வாழ்வில் எளியவராய் இருந்தாரோ அந்த இன்பம் துறந்து இல்லறத் துறவியாய் வாழ்ந்தார் திருநீலகண்டர்.

இறைவன் திருவோடு கொணர்ந்து கொடுத்து, தம் அருளிச் செயலால் அதை மறையச் செய்து திருநிகழ்வை நிகழ்த்துகின்றார். தாம் திருவோட்டை அபகரிக்கவில்லை என்பதை மனைவியின் கரம்பற்றி குளத்தில் மூழ்கிக் கூறுமாறு சிவயோகி சொல்ல, மனைவியின் கரம் பற்றாது மூங்கில் தண்டை ஒரு முனையில் திருநீலகண்டரும், மறுமுனையில் மனைவியும் கரம் பற்றி மூழ்கினார். மனைவியின் கரம் பற்றி மூழ்க வேண்டும் என்று சிவயோகி ஆணையிட, தம் இயலாமையை உலகு அறிய வெளிப்படுத்தினார் திருநீலகண்டர். அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை என்ற நல்லறமாகிய இல்லறம் உயிர் சார்ந்தது! இன்பத்தில், துன்பத்தில், சுகத்தில், துக்கத்தில், நன்மையில், தீமையில் வாழ்வில், தாழ்வில், ஏற்றத்தில், இறக்கத்தில் என எல்லா நிலைகளிலும் இணைந்தும், பிணைந்தும், கனிந்தும், நெகிழ்ந்தும், மகிழ்ந்தும் வாழும் நிலை!
அதனால்தாம் திருவள்ளுவர்,

"உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு"

என்றார். தோழமை என்ற நிலையே தூய இல்லற வாழ்வின் அடையாளம்! நெறி தவறிப்போனாலும், மீண்டும் வருந்தி திருந்தி வாழ்வதே உண்மை வாழ்வு என்பதை திருநீலகண்ட நாயனார் வரலாறு உணர்த்துகின்றது.

91/1

## தொண்டு செய்து நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன அல்லேன்

திண்ணனார் என்ற வேடுவர் இறைவன்மாட்டுக் கொண்ட பேரன்பால் இறைவனைப் பூசித்த திருநிகழ்வு கண்ணப்பர் வரலாறு.

புலாலைத் தொட்டு சுவைத்து ருசி பார்த்துவிட்டு, "நீ உண்ணலாம்" என்று இறைவனுக்குப் பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து ஊட்டிய திண்ணனாரின் பேரன்பை உலகிற்கு விளக்க, இறைவன் தன் வலக் கண்ணில் குருதியை வரவழைக்கின்றார். பச்சிலை மூலிகைகளால் குருதி வழிவதை நிறுத்தப் பார்க்கின்றார் திண்ணனார். இறைவனின் கண் குருதி நின்ற பாடில்லை. திண்ணனார் தம் கண்ணைப் பெயர்த்து எடுத்து குருதி வந்த இறைவன் கண்ணில் அப்புகின்றார். குருதி நிற்கின்றது. இப்பொழுது இடக்கண்ணிலும் குருதி வழிகின்றது. "மருந்து கைக்கொண்டேன்" என்று தம் இடக் கண்ணையும் பெயர்த்து எடுத்து அப்ப முயற்சிக்கின்றார்.

"கண் அப்ப நிற்க!" என்று திண்ணனாரின் கரம்பிடித்து நிறுத்தி, இறைவன் "மாசில்லா அன்பனே! என் வலப்பக்கத்தில் இருக்கக் கடவாய்" என்று கண்ணப்பருக்கு பேரருள் புரிகின்றார்.

அவனுடைய வடிவுஎல்லாம் நம்பக்கல் அன்பு என்றும்
அவனுடைய அறிவு எல்லாம் நமைஅறியும் அறிவு என்றும்
அவனுடைய செயல் எல்லாம் நமக்குஇனிய வாம் என்றும்
அவனுடைய நிலைஇவ்வாறு; அறி நீ"

என்று சிவகோசரியார்க்கு மட்டும் அல்ல உலகுக்கு, கண்ணப்பர் அன்பை இறைவன் உணர்த்திய திருநிகழ்வு ஆகும். இந்த மூன்று நிகழ்வுகளிலும் பட்டினத்து அடிகள்

சிறுத்தொண்டரின் பக்தியையும்,
திருநீலகண்டரின் ஆழமான உறுதிப்பாட்டையும்,
கண்ணப்பரின் பேரன்பையும்

உணர்ந்து, உணர்ந்து உள்ளம் உருகிப் பாடிய பாடலை நாம் உணர்ந்து ஓதுவோம்.

நாளும் திருத்தொண்டர்கள் புகழ் போற்றுவோம்!

என்றும் வேண்டும் இன்ப அன்பு

[signature]

## குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்

# குருபூசை விழா

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஆதிகுருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகளின் மகாகுருபூசைவிழா 09.09.2014 ஆவணி பூரட்டாதித் திருநாளன்று திருவண்ணாமலையில் அமைந்துள்ள குருமூர்த்தக் கோயிலில் 46ஆவது குருமகாசந்நிதானம் திருவருள்திரு பொன்னம்பல தேசிக சுவாமிகள் அன்பர்கள் புடைசூழச் சென்று சிறப்பு வழிபாடு செய்து கொண்டார்கள்.

மறுநாள் 10.09.2014 அன்று காலை 10 மணியளவில் குன்றக்குடியில் ஆதீனக் கொலுமண்டபத்தில் சமய இலக்கிய விழா நடைபெற்றது. ஆதீன ஓதுவார் திரு.அரு.மாசிலாமணி ஓதுவார் இறைவணக்கம் பாடினார். பிள்ளையார்பட்டி அருள்திரு கோவிந்தானந்த சுவாமிகள் விழாத் தொடக்கவுரையாற்றினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமை வகித்து முனைவர் சொ.சேதுபதி எழுதிய "நிலைபெறுமாறு எண்ணுதியேல்" என்ற நூலையும் திரு.கி.சிங்காரவடிவேல் எழுதிய "இளைப்பாறும் சுமைகள்" என்ற நூலையும் தம் திருக்கரங்களால் வெளியிட்டார்கள். இந்நூல்களின் முதற்படிகளை முறையே டாக்டர்.கே.பாலகிருஷ்ணன் அவர்களும், டாக்டர்.எஸ்.மோகன் அவர்களும் பெற்றுக்கொண்டனர். டாக்டர் அய்க்கன் அவர்கள் நூல்கள் பற்றித் திறனாய்வுரையாற்றினார். அடுத்து, பேராசிரியர். முனைவர்.கு.ஞானசம்பந்தன் அவர்கள "அடிகள் வியந்த மூவர்" என்னும் பொருளில் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்.

பிற்பகல் 2.30 மணியளவில் குன்றக்குடி ஆதீன ஓதுவார் "தெய்வத்தமிழிசைச் செல்வர்" திரு.எஸ்.கண்ணாயிர தேசிகர் குழுவினரின் திருமுறை இசையரங்கு நிகழ்ந்தது.

மாலை 4.30 மணியளவில் பாராட்டுவிழா. திருவருள்திரு. குருமகாசந்நிதானம் அவர்கள் பேராசிரியர்.முனைவர்.கு.ஞானசம்பந்தன்

அவர்களுக்குத் "தமிழாகரர்" என்னும் பட்டம் தந்து பாராட்டிச் சிறப்பித்தார்கள். தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர்.ம.திருமலை அவர்கள், பிள்ளையார்பட்டி அருள்திரு கோவிந்தானந்த சுவாமிகள் அவர்கள், திரு.முனைவர். எஸ்.மோகன் அவர்கள் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். பின்னர் பாராட்டுப் பெற்ற பேராசிரியர். முனைவர். கு.ஞானசம்பந்தன் அவர்கள் ஏற்புரையாற்றினார். நன்றியுரை. மங்கலவாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது.

இரவு 7.30 மணியளவில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவீற்றிருந்து அன்பர்களுக்கு அருளாசி வழங்கினார்கள்.

## காலம் விடை சொல்லும்

அறிஞர் அண்ணா, 1967-ஆம் ஆண்டு காரைக்குடி திருக்குறள் கழக விழாவுக்கு வருகிறார். அப்போது குன்றக்குடிக்கும் வரும்படி அறிஞர் அண்ணாவுக்கு எழுதினார் அடிகளார். அறிஞர் அண்ணாவும் காரைக்குடி திருக்குறள் விழாப் பேச்சை முடித்துக்கொண்டு குன்றக்குடிக்கு வந்தார். திருமடத்தின் மரபுப்படி வரவேற்பு கொடுக்கப்பட்டது! இரவு உணவு திருமடத்தில்! அன்று அறிஞர் அண்ணாவுடன் கூட வந்தவர்கள் கவியரசு கண்ணதாசன், பூவாளூர் பொன்னம்பலனார் உணவுக்குப் பின் தோட்டத்தில் நிலவொளியில் கலந்துரையாடல்! வழக்கம்போல் அறிஞர் அண்ணாவுக்கும் குன்றக்குடி அடிகளாருக்கும் இடையில் நட்புறவு கலந்த உரையாடல். பேச்சு மெல்ல அரசியல் பக்கம் திரும்பியது. குன்றக்குடி அடிகளார் காங்கிரஸ் கட்சிப் பற்றாளர்... காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு திரட்டுகிறார். அறிஞர் அண்ணா காங்கிரஸுக்கு எதிர்ப்பாகக் கூட்டணி அமைத்துக் கொண்டு ராஜாஜி தலைமையில் போராடுகிறார்! காமராஜரை எதிர்ப்பதற்கும் ராஜாஜியை ஆதரிப்பதற்கும் நோக்கம் என்ன? இது அடிகளாரின் கேள்வி?

அறிஞர் அண்ணா அன்று தந்த பதில் "காலம் விடைசொல்லும்... காத்திருக்கலாமே!" என்பது 1967 பொதுத் தேர்தலில் வெற்றி பெற்ற பிறகு அறிஞர் அண்ணா தலைவர் பெரியாரைக் கண்டதும் "இது பெரியார் அரசு" என்றதும், "இராஜாஜி தேனிலவு முடிந்துவிட்டது" என்று கூறியதும் காலம் தந்த விடைகளாகும்.

- அருள்நெறித்தந்தை

(மண்ணும் மனிதர்களும் பக்கம் 58-59)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## மழலையின் கையிலே பொற்கிண்ணம்

மாணிக்கவாசகர் துறைதோறும் வளர்ந்தவர். திருவாசகம் ஓர் ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியைத் தெளிவாகக் காட்டுகிறது. ஆன்மா அதன் பயணத்தை இறைவனின் கருணையினால் கருவூரில் தொடங்குகிறது. திருவூரில் பயணம் நிறைவுறும். பயணம் செவ்வியதாக அமைந்தால் எளிதில் திருவூரை ஆன்மா அடையும். பல ஆன்மாக்கள் தத்தம் விருப்பம் மேவிய தடத்தின் வழியே மட்டும் பயணம் செய்வதன் விளைவாகப் பயணம் நீட்டிக்கவும் செய்யலாம்.

மானிடப் பிறவியின் தகுதிக்கு ஏற்றவாறு வாழ்ந்திடாவிடில் என்ன நிகழும்? மீண்டும் புழுவின் பிறப்பிலிருந்து தொடங்க வேண்டும் என்று அப்பரடிகள் கூறுகின்றார்.

*புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா*
*நின்னடி என்மனத்தே*
*வழுவா திருக்க வரம்தர*
*வேண்டும் இவ் வையகத்தே*
*தொழுவார்க் கிரங்கி இருந்தருள்*
*செய்பா திரிப்புலியூர்ச்*
*செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை*
*மேல்வைத்த தீவண்ணனே!*

என்னும் அப்பரடிகள் திருப்பாடலை ஓர்க. மேலும் மானிடப் பிறவிக்கு மட்டுந்தான் நினைக்கும் புலன் உண்டு; திறன் உண்டு. அப்பரடிகள்.

*முன்னே உரைத்தால் முகமனே ஒக்கும்*
*இம்மூவுலகுக்(கு)*
*அன்னையும் அத்தனு மாவாய் அழல்வணா*
*நீயலையோ*
*உன்னை நினைந்தே கழியும்என் ஆவி*
*கழிந்ததற்பின்*
*என்னை மறக்கப் பெறாய் எம் பிரான் உன்னை*
*வேண்டியதே!*

என்று இரந்து வேண்டுகிறார். அதாவது நினைக்கும் தகுதியுடைய மானிடப் பிறப்பில் உள்ளவரை இறைவா, உன்னை நினைப்பேன்! ஒருகால் மானிடப் பிறவியை இழந்து நினைத்தற்கு வாய்ப்பில்லாத புழுப் பிறப்பை அடையின் இறைவா, நீ என்னை மறக்கக்கூடாது என்று வேண்டுவதறிக. ஆதலால் பிறப்பை அறிந்து ஆன்மா தகுதிப்பாடுறுதல் வரை சுற்றும் என்பதறிக.

இறைவனின் கருணையே உயிர்களின் பயணத் தொடக்கத்திற்குக் காரணம். பயணங்கள் நிகழ்வதற்கும் மாறுவதற்கும் முற்றுப் பெறுவதற்கும் ஆன்மாவின் வாழ்நிலையே காரணம். ஒரு ஆன்மா மானுட நிலையை எய்துதலே கூடிய பல பிறவிகளுக்குப் பிறகுதான்! பலப்பல இடர்ப்பாடுகளுக்கும் பிறகுதான்! மனிதன் மிருகமும் அல்லன்; தெய்வமும் அல்லன், மனிதன் மிருகத் தன்மையிலிருந்து விலகி, மானுடத் தகுதியைப் பெற்று மெய்ம்மை நிலையையும் தெய்வத் தன்மையையும் அடைதலே ஆன்மாவின் பயணக் குறிக்கோள்; பயன்! மாணிக்கவாசகரிடம் ஆன்ம வளர்ச்சிக்குரிய தகுதியின்மைகளுக்குக் கழிவிரக்கம் கொள்ளல், ஆராக் காதலுடன் உண்மையை நாடுதல், இறைவனைத் தேடுதல் முதலிய தகுதிகள் அமைந்திருக்கின்றன. தகுதியில்லாதார் தகுதி நோக்கி - வளர்தலே வாழ்வு.

இறைவழிபாட்டின் நோக்கமே தகுதிப்பாடுறுதல் என்பதுதான். வட்டம் வரைய வேண்டுமாயின் காம்பஸ் தேவை. காம்பஸில் நீண்ட முனையை ஊன்றி, சிறிய முனையில் எழுதுகோலைப் பொருத்தி வட்டமிடுகிறோம். இப்படி வரையப்பெறும் வட்டம் கோணல் இல்லாமல் அமையும். அதுபோல ஆன்மா தன் இதயத்தை - சிந்தனையைத் திருவருளிடத்தில் நிறுத்தித் தன் செயலைச் செய்யுமாயின் குறையினின்றும் விலகி நிறைவு பெறும்; அறியாமையிலிருந்து விலகி அறிவு பெறும்; வாழ்க்கை வடிவம் பெறும்; நிறைநலம் பெறும்; இன்ப அன்பினை எய்தும். இதற்கு மாணிக்கவாசகர் வரலாறு சான்று.

மாணிக்கவாசகர் தேர்ந்தெடுத்த வாழ்க்கை தவ வாழ்க்கை அல்ல. மாணிக்கவாசகருக்கு வாய்த்தது அரசியல் வாழ்க்கை; அமைச்சியல் வாழ்க்கை. அரசியல் - அமைச்சியல் வாழ்க்கையில் தவம் மேவுதல் இயற்கையன்று; மரபும் அன்று. அரசியல் - அமைச்சியல் வாழ்க்கையில் வினைகளும் வினைகளின் பயனாகிய அதிகாரங்களும் அமையும். ஒரோவழி பத்திமை பொருந்தி அமைதலும் கூடும். இது விதிவிலக்கு. ஆயினும் மாணிக்கவாசகர் அமைச்சியல் வாழக்கையையே தவ

வாழ்க்கையாக நடத்திய அருமை அறிதலுக்குரியது. அதனாலேயே மாணிக்கவாசகர் பாண்டியனின் ஆணைவழி குதிரை வாங்க நாட்டமில்லாமல் திருக்கோயில் கட்டினார். மாணிக்கவாசகர் செய்தது தவறா? உலகியல் முறைப்படி தவறு; அறநெறி விதிகளின்படி தவறன்று. அரசன் அறநெறியறிந்து உணர்வான் என்று மாணிக்கவாசகர் நம்பினார். தகுதி இல்லாதாரை - நெறிமுறை தவறுகிறவர்களைத் திருத்தும் பாங்குகள் பலப்பல. திருத்தங்காணும் முயற்சி, நெறிமுறை தவறுகிறவர்களின் தகுதிப் பாட்டிற்கேற்ப அமையும். கயவர் ஒறுத்துத் திருத்தப்படுவர். சான்றோர் சொல்லத் திருந்துவர். மிக உயர்ந்தோர் குறிப்பாக, அரசியலில் ஏவினது ஒழிந்து பிறிதொன்று செய்தலாலே ஏவினது தவறு என்று உணர்ந்து திருந்துவர் என்பது மரபுவழி வந்த வழிமுறை. மாணிக்கவாசகர் அரசன் ஏவியவழி, குதிரை வாங்காது திருக்கோயில் கட்டியமையால் குதிரை வாங்குதல் தவறு, திருக்கோயில் கட்டியது நன்று என்று உணர்வான் என்று நம்பினார். ஆனால், பாண்டியன் தவமின்மையின் காரணமாக அங்ஙனம் உணரவில்லை. நடைமுறை வேறுவிதமாக அமைந்துவிட்டது!

அமைச்சியல் வாழ்க்கையில் இருந்த மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்குக் குதிரை வாங்கப்போன நாள் முதல் அவர்தம் வாழ்க்கையில் அற்புதமான மாற்றம் ஏற்பட்டது; தவமே மேலிட்டது. ஊராரை மறந்தார்; உற்றாரை மறந்தார்; இறைபணியில் நின்றார். திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரைத் தேடி வந்து ஆட்கொண்டான்! ஆம்! இதுவே சிவபெருமான் வழக்கம். சிவபெருமானுக்கு எப்போதும் அடியார்களுக்குப் பஞ்சம்! அதனால் தேடிவந்து தகுதியானவர்களை அழைத்துக் கொள்வான். மாணிக்கவாசகரை, திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஞானாசிரியனாக வந்தருளி ஐந்தெழுத்தருளி ஆட்கொண்டருளினன். இதனை,

*"நானேயோ தவம் செய்தேன்;*
*சிவாயநம எனப் பெற்றேன்"*

என்று வியந்து கூறுகின்றார். மாணிக்கவாசகருடைய தவம் ஐந்தெழுத்தைத் தரவில்லை; சிவபெருமானுடைய கருணையே தந்தது என்பது கருத்து.

ஓர் ஆன்மா அதன் தகுதியைத் தானே வியந்து கூறுதல் ஆணவத்தின் பாற்படும். அவ்வழி, தகுதியின்மையேமேவும். சிவநெறி

ஒழுக்கத்திற்குரிய தகுதிப்பாடுகளுள் ஒன்று "தாழ்வெனும் தன்மை" அதாவது, அடக்கம், நிலத்தினைக் கிண்டிக்கொண்டு விண்நோக்கி வளரும் மரம் நிலத்தடியிலும் வேர் பாவும். நிலத்தடியில் பாவும் வேரின் வலிமையில்தான் மரத்தின் வலிவு இருக்கிறது. அதுபோல ஆன்மாக்களின் வளர்ச்சி - நிலைப்பாடு ஆரவாரத்தில் இல்லை; அடக்கத்தில் தான் இருக்கிறது. தாழ்ந்து பழகும் இயல்பில்தான் வளர்ச்சியின் அமைவு இருக்கிறது.

*"தாழ்வெனும் தன்மை நோக்கிச்*
*சைவமாம் சமயம் சாரும்*
*ஊழ்பெறல் அரிது"*

என்று அருணந்திசிவம் கூறுவார். "கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை" என்று கூறுவார் மாணிக்கவாசகர். திருத்தொண்டத் தொகையின் தோற்றமே இதற்கு ஒரு சான்று. தொண்டர்நாதனைத் தூதனுப்பிய நம்பியாரூரர், "அடியார்க்கும் அடியேன்" என்று பாடும் நிலை அடக்கத்தின் அருமையை - பயனை விளக்கத்தானே! ஆதலால் மாணிக்கவாசகர் தம்மை வியந்து பாராட்டிக் கொள்வதில்லை. திருவாசகம் முழுதும் தாழ்வின் தன்மையே பரவிக்கிடக்கிறது. மாணிக்கவாசகர் தனது தகுதியை அங்கீகரித்து ஒப்புக்கொண்டதில்லை! வியந்து பாராட்டிக் கொண்டதும் இல்லை. இறைவனின் அளப்பரும் கருணையே ஆட்கொண்டது என்பார். ஆயினும் மாணிக்கவாசகர் இறைவனின் அருமையை - ஆட்கொண்டருளிய அருமையை உணரவில்லை; அறிந்து கொள்ளவில்லை என்கிறார்.

மழலை மொழி பேசும் குழந்தை; விளையாட்டுப் பிள்ளை. பிள்ளை கையில் தங்கக் கிண்ணம் கிடைத்தது. குழந்தைக்குக் தங்கக் கிண்ணம் தேவையா? விளையாட்டுப் பொம்மை தேவையா? தின்னும் மிட்டாய் தேவையா? பருவத்தின் இச்சையே தேவை; அதுவே வெளிப்படும். குழந்தை தங்கக் கிண்ணத்தின் மதிப்பறியாது. தங்கக் கிண்ணத்தைத் தந்து அதற்கு ஈடாக ஒரு பொம்மையை அல்லது ஒரு மிட்டாயை வாங்கினாலும் வியப்பில்லை. அது போல மாணிக்கவாசகர் செய்யவில்லை. ஆனால் மாணிக்கவாசகர் இந்த உண்மையைத் தமது ஆன்மிக வாழ்க்கைக்குச் சான்றாகக் காட்டுகிறார். ஏன்? மாணிக்கவாசகரைப் போல இறைவனின் அருமையை உணர்ந்தவர்களும் இல்லை; தேடினவர்களும் இருந்ததில்லை ; அந்தண வாழ்வைத் துறந்து அமைச்சு வாழ்விற்குச் சென்றமையை எண்ணிப் பாடுகின்றாரா? வாழ்க்கையின் குறிக்கோள்

ஆன்மாவைப் பூரணத்துவமாக்கும் தவ வாழ்க்கையை மேற்கொள்ளுதலேயாம். அஃதில்லாமல் அமைச்சு வாழ்க்கையை ஏற்றதை எண்ணி வருந்துகிறார் போலும்!

இனம், இனத்துடன் சேரும். இஃது இயற்கை. மாணிக்கவாசகருடன் பலர் இருந்தனர். அவர்கள் மெய்யன்பர்கள், அவர்கள் சிவபெருமானிடம் எளிதில் சேர்ந்தனர்; மெய்ம்மை ஆயினர். ஆனால், மாணிக்கவாசகர் பின்தங்கிவிட்டார்! ஏன்? இறைவனை அடைதலுக்கு மெய்ம்மை தேவை. மாணிக்கவாசகரிடம் மெய்ம்மை இல்லை. பொய்ம்மையே இருந்தது! – இது, மாணிக்கவாசகரின் சொந்த விமர்சனம்! உண்மை உணர்வது நமது கடமை. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையிலும் செயல் மாளவிடவில்லை. திருப்பெருந்துறைத் திருக்கோயிலைக் கட்டினார். அல்லவா? அது ஒரு பணி! செயல்! ஆதலால், செயல் அடங்கவில்லை என்று எண்ணினால் தவறில்லை! தவக்கோலம்! பத்திமைப் பரவசம்! ஆயினும், செய்வினைகளும் இருந்தன. வினை நீக்கம் பெற்ற வாழ்க்கை வந்தமையவில்லை. அதனால் "பொய்யிலங்கெனை" என்று கூறினார் போலும்.

இறைவன் மெய்ப்பொருள்; மெய்யன்பர்கள் மெய்ம்மை மேவினார். தகுதியுடையார்க்கு வழங்குவதில் என்ன சிறப்பு இருக்கிறது. தகுதி இல்லாதாரைத் தகுதியுடையவராக்கி ஆட்கொள்ளுதலே சான்றோருக்கு அழகு. தகுதி மிகுதியும் உடையோருக்குக் கடன், இறைவன் வெண்ணீறு சண்ணித்த மேனியன். இறைவன் ஏன் வெண்ணீறணிகின்றான்? ஆன்மாக்கள் தாம் செய்த வினைகெட நீறணிகின்றான். இது இயல்பு; மரபு. இயல்பிலேயே வினையின் நீங்கி விளங்கிய அறிவினன் இறைவன். அப்படியானால் இறைவன் உடம்பில் திருநீறு எதற்கு? இந்த வினாவுக்கு விடை திருக்கோவையார் தருகிறது. குழந்தைக்கு நோய்! குழந்தை மருந்துண்ண இயலாது. ஏன்? குழந்தையின் பசுங்குடல் மருந்தைத் தாங்காது. அதுபோல, ஆன்மாக்களின் வினைவளம் நீறெழ நீறணிவான் அம்பலவன் என்று கூறுகிறது திருக்கோவையார். இறைவா! நின்னைத் தொழுதெழுவார் வினைவளம் நீறாய்ப் போக நீறணிந்து நிலவுன் நின் கருணையால் என் பொய் கெடட்டும் என்பது கருத்து. ஆட்கொண்டருளும் கடப்பாடுடைய இறைவன் பொய்ம்மையை அல்லவா மெய்ம்மையாக்க வேண்டும்? அதுதானே பிறவா யாக்கைப் பெரியோனுக்குப் பொருத்தமானது என்பது மாணிக்கவாசகர் எண்ணம்.

"இறைவா! அம்மையப்பனே! அருளே உருவமாகிய சிவசக்தியைப் பாசத்தில் கொண்டருளியவனே! நீயே வந்து என்னைத் திருப்பெருந்துறையில் "வா"வென்றருளினை! பணி கொண்டருளினை! திருப்பெருந்துறை சிவனே, நின்னை அடைவதற்கு முன் உன்னை மூவர்கோனாய், மூவர் தலைவனாய்க் கண்டனன். அருமையில் எளிய அழகெனக் கண்டனன். ஆனால் நீயே வந்தெனைத் தலையளித்து ஆட்கொண்டருளிய பின் நின்னருமை உணர்கிலேன்! மழலையின் கையில் பொற்கிண்ணம் போலாயிற்று! நின்னருள் என்வசம்! திருப்பெருந்துறை சிவனே! கால காலனே! ஊழி முதல்வனே! ஊழிப் புழுதியைத் திருநீறாகக் கொண்டருளும் பெருமானே! என்றும் உள்ளவன் நீ! மெய்ப்பொருள் நீ! நின் திருமேனியில் படிந்துள்ள திருநீறு, ஆன்மாக்களின் வினைவளம் நீறாக அணிந்தருளிய மாண்பு! உண்மை அன்பர் நின்னை மேவினார்! நானோ பொய்யன்! நீயோ அன்பருள் புக வைத்தாலும் போய் உய்யும் தரமறியேன்! தகுதியிலேன்! நெறியறியேன்! ஆயினும் நீ பெரியோன்! சிறியேன் பிழையெல்லாம் பொறுத்தருளும் பெரியோன்! ஆதலால், என்னை இடையில் விட்டுவிட்டுப் போவது அழகா? பொருத்தமா? அருள்கூர்ந்து சொல்லுக? என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

இத்திருப்பாடலில் "போவதோ சொலாய்" என்பது நினையத்தக்கது. அடைக்கலப் பொருளைப் பாதுகாக்காமல் வறிதே விட்டுச் செல்லல் பெரியோருக்குப் பொருத்தமல்ல என்று எடுத்துக்கூறிய அருமையை அறிக.

*மையி லங்கு நற் கண்ணி பங்கனே*
*வந்தெனைப் பணி கொண்ட பின் மழக்*
*கையி லங்குபொற் கிண்ண மென்றலால்*
*அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்*
*மெய்யி லங்கு வெண் ணீற்று மேனியாய்*
*மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினார்*
*பொய்யி லங் கெனைப் புகுத விட்டு நீ*
*போவதோ சொலாய் பொருத்த மாவதோ?*

- (திருச்சதகம்-96)

---

# இறப்பை வென்றே புகழால் நின்றாய்!

உலகத்திருக்குறள் பேரவைப் பொதுச் செயலாளர்.

## திருச்சி நா. சண்முகனார் மறைவிற்கு இரங்கற்பா

(புலவர். ம. இளங்கீரன்)

வெண்முகம் கொண்டாய் இல்லை
வீசிடும் ஒளிமு கத்தோய்!
“சண்முகம்” என்னும் பேரைச்
சரித்திரம் திருச்சி சாற்றிப்
பண்முகம் முகாரி பாடும்
பாடெலாம் தமிழி னத்தார்
விண்முகப் புகழ்பெறச் செய்
வீரரே! மறைந்தீர் அந்தோ!

அண்ண(ன்)நீர் அனைவோ ருக்கும்
ஆதர வாக நிற்பீர்
கண்களில் நீர்தான் பொங்கக்
காண்பவை எல்லாம் நீரே!
எண்ணமும் செயலும் சொல்லும்
யாவுமே அடிகள் தொண்டாய்த்
திண்மையும் செறிவும் மிக்கோய்
தேர்தமிழ் வளர்த்தாய் எங்கே?

தொண்டரில் உறவு சுற்றம்
துறந்தவர் போன்று ழைத்தீர்!
கண்டவர் போற்றும் உன்றன்
கனிமொழி பேச்சில் ஒன்றி
மண்டினர் மாநா டெல்லாம்
மறப்பரோ மக்கள் சேவை?
திண்டிறல் திருச்சி போற்றும்
தேர்ந்தநம் அடிகள் நட்பீர்!

பண்பொடு பணிவும் கொண்டோய்!
பகுத்தறி வாளர், நல்லோர்;
நண்பினர் நாடிச் செல்லும்
நற்சுய மரியாதைக் கோர்
தண்ணெனும் தமிழ்நி லாவே!
தமிழ்ப்பொதுத் தொண்டில் ஏற்றம்
கொண்டதோர் குறள்வி ளக்காம்
கொள்கைகள் வளர்த்தோய் போற்றி!

வண்டென மொய்க்கும் தொண்டர்
வலிவுடைப் படைவீ ரர்க்குள்
கண்டதோர் செயல் தலைமை
காண்பதற் கெளிமை கொண்ட
எண்டிசை புகழும் சீரும்
இடையறா உழைப்பால் பெற்றோய்!
அண்டிய இறப்பும் வென்றே
ஆளுமைப் புகழால் நின்றாய்!

---

இயற்கை அழகு; அதனை ஆராதனை செய்வோம்!
இயற்கை அறிவு; அதனிடம் கற்றுக் கொள்வோம்!
இயற்கை அன்பு; அதனை நேசிப்போம்!
இயற்கை நட்பு; அதனிடம் தோழமை கொள்வோம்!
இயற்கை தாய்மை; அதனைச் சேதப்படுத்தாத சேய்கள் ஆவோம்!
இயற்கை இறைமை; அதனை வழிபடுவோம்!
இயற்கையே மானுட வாழ்வின் இயல்பாகும்; சுற்றுப்புறச் சூழலே மனிதரை வாழ்விக்கும் உயிர்க்காற்று.
இயற்கையைப் பேணுவோம்; பாதுகாப்போம்!
இயற்கை உரம் சார்ந்த விவசாயம் வளர்ப்போம்!
மரங்கள் மனித குலத்தின் வரங்கள்;
மரம் நடுவோம்; மழைபெறுவோம்!

- தவத்திரு பொன்னம்பல அடிகளார்

(உயிர்நாரில் தொடுத்த மாலை பக்52 - 53)

# சிவஞான முனிவர் வலியுறுத்தும் சைவத்துக்கான திருக்குறள் அடிப்படை

(பேராசிரியர்.முனைவர். ச. கங்காதரன்)

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் என்ற தத்துவ நூலுக்கு சிற்றுரை, பேருரை என்று இரு உரைகளை சிவஞான முனிவர் அருளியுள்ளார். சிவஞான முனிவர் உரை சைவசித்தாந்தத்தின் தத்துவங்களை திட்ப நுட்பங்களுடன் தெரிவிக்கின்றது. சிவஞானபோத பாடியத்தின் (பேருரை) தொடக்கத்தில் சிவஞான முனிவர் சில உண்மைகளை நமக்குத் தெரிவிக்கிறார். சிவஞான பாடியத்தின் தொடக்கப்பகுதி :

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருப்பாசுரம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

திருவாசகம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க......
அவனருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந்தன்னை
முந்தைவினைமுழுது மோய உரைப்பனியான்

திருச்சிற்றம்பலம்

திருக்குறள்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

திருச்சிற்றம்பலம்

**கற்பக விநாயகர் துதி**

பொற்பொதுக் குடபாற் பொற்புற நடிக்குங்
கற்பகத் திருதாள் கற்பவர் நமரே
திருச்சிற்றம்பலம்.

**குருமரபு வாழ்த்து**

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநுவாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குரு நமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக் மாதோ
திருச்சிற்றம்பலம்

சைவ சித்தாந்தம் தமிழ்மரபு, பொது இந்திய மரபு என்ற இரு அடிப்படை மரபுகளை உடையது. தமிழ் மரபின் சிறப்புக் கூறுகளைத் தொல்காப்பியம், சங்க இலக்கியம், பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்கள் என்னும் நூல்களிலிருந்து கொள்கிறது. அத்துடன் அகில இந்திய மரபுக்குச் சொந்தமானவைகளை வேதம், உபநிடதம், சைவ ஆகமம் என்னும் நூல்களில் இருந்து கொள்கிறது. இந்த இருமரபுகளின் கூட்டுப் பயனாக (Eumulative) இடம் பெறுவதே சைவமரபு. கங்கையும், யமுனையும் ஒன்று கூடி கலந்த பிறகு, கலந்த நீரில் எது கங்கைப் பகுதி, எது யமுனைப் பகுதி என்று பிரித்தறிய முடியாத வகையில் கலந்துள்ளது போல, தற்போதுள்ள சைவ மரபில் எது தமிழ் மரபுப் பகுதி, எது இந்திய மரபுப் பகுதி என்று பிரிக்கமுடியாத வகையில் கலந்துள்ளது என்பதை நாம் அறியலாம்.

சிவஞான பாடியத்தைத் தொடங்கும்போது 'வாழ்க அந்தணர்' என்னும் திருஞானசம்பந்தர் தேவாரத்தை முதலில் கூறி, அடுத்து சிவபுராணத்தில் முதலில் 'நமச்சிவாய வாழ்க' என்று தொடங்கி 'முந்தை வினை முழுதுமோய உரைப்பன்' என்னும் பகுதிவரை அவையடக்கப் பகுதியாகக் கொள்கிறார். ஆகவே தேவார, திருவாசகம் சைவத்தின் அடிப்படை என நாம் அறிகிறோம். இத்திருமுறைகளுடன் திருக்குறளையும் சிவஞான முனிவர் சைவத்துக்கு அடிப்படை நூலாகக் கருதுகிறார் என்பதையே இவர் செயல் குறிக்கிறது.

திருக்குறள் நீதிநூல், சிவஞானபோதம் சைவநூல் இவற்றுக்கிடையே என்ன ஒற்றுமை என்று சிலர் கேட்கலாம். சைவர் அவ்வாறு கேள்வி கேட்காது, சிவஞான முனிவர் கூற்றை வேதமாகக் கொண்டு, திருக்குறளை சைவமரபின் அடிப்படை நூலாக சைவர் கருதுவர். அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களை அடிப்படையாக சைவர் கொண்டு, இந்த மூன்று அடிப்படைகளின் விளக்கமாக, பயனாக வீடுபேற்று கருத்துக்களைத் தெரிவிக்கும் நூலாக சிவஞானபோதத்தை சைவர் கொள்வர். மேலும் திருக்குறள் அறத்தின் முடிநிலைப் பயனே சைவம் என்பது சைவமரபு. ஆறுமுகநாவலர் சைவ ஆசிரியர் அவர். குருபூசை பற்றிக் கூறும்போது, சமயாசாரியர் நால்வர், சந்தானசாரியர் நால்வர் இவர்கள் குருபூசையுடன் திருவள்ளுவர், சேக்கிழார் என்னும் இரு ஆசிரியர்கள் குருபூசையையும் சேர்த்து பத்து ஆசிரியர்கட்கும் குருபூசை கொண்டாட வேண்டும் என்று கூறுகிறார். மேலும் ஆறுமுக நாவலர் கூற்றைப் பின்பற்றி திருவாவடுதுறை ஆதீனத்தில் திருவள்ளுவருடைய குருபூசையைச் சிறப்பாகக் கொண்டாடுவது கருதத் தக்கது.

தேவார, திருவாசகம் போல திருக்குறளும் சைவத்துக்கு அடிப்படை என்பதை பாடிய தொடக்கத்தில் முதல் குறளை கடவுள் வாழ்த்துப் பகுதியில் குறிப்பதன் மூலம் திருக்குறளின் அடிப்படையை நாம் உணரவேண்டி உய்த்துணர வைக்கிறார் சிவஞானமுனிவர். திருக்குறள் சைவத்துக்கு எவ்வாறு அடிப்படை என்பதை 50 பக்கங்கள் தனியாகவோ அல்லது பாடியத்தின் பகுதியாகவோ எழுதுவதற்குப் பதில் இவ்வாறு உய்த்துணர வைத்து இருப்பதை உணரலாம்.

"திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே" "திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி" என்னும் இரு நூல்களிலும் திருக்குறள் சைவகருத்துக்களுக்கு எவ்வாறு அடிப்படையாக அமைகிறது என்று சித்தாந்த கலைச்செல்வர் க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் கூறுவர். அறத்துப் பாலின் முற்பகுதியாக கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை என்னும் நான்கு அதிகாரங்கள் அமையும். இப்பகுதி திருக்குறளின் முகம் போல அமைகிறது. அறத்துப் பாலின் இறுதிப் பகுதியாக உள்ள நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்னும் ஐந்து அதிகாரங்கள் (34 முதல் 38 வரை உள்ளவை) திருக்குறளின் அகம் போன்றவை. இந்த 9 அதிகாரங்களின் பிழிவாக அமைவதே சைவ சித்தாந்த தத்துவம் என்று சைவ அறிஞர். க. வச்சிரவேலனார் கூறுவர். திருவள்ளுவர் பெருமானின் திருவடிகளை

வணங்கி, "பெருமானே! நீங்கள் திருக்குறளை அருளிய நோக்கத்தின் பயனை அடியேன் அறிந்து பயன்உற அருள் செய்யவேண்டும்", என்ற வேண்டுதலுடன் இங்கு குறிக்கப்படும் 90 பாடல்களின் பொருளை இசைந்து அறிந்து, அறிந்தவாறு ஒழுகும் ஒழுக்கத்தையும் ஓர் அன்பர் பெறுவாராயின், அவர் இருக்குமிடம் தேடி, சைவசித்தாந்தம் வரும் என்பது அறிஞர் கருத்து.

எழுத்துக்கள் "அ" என்ற எழுத்தை அடிப்படையாக உள்ளது போன்று உலகப் பொருள்களும் உலகில் உள்ள உயிரக்ளும் ஆதிக பகவனாகிய முதல்வனை முதன்மையாக உடையது என்னும் முதல் திருக்குறளின் அடிப்படையைப் புரிந்து கொள்வதற்கு சில அடிப்படைகளை நாம் புரிந்துகொள்ள வேண்டும். வெளிச்சம் நிரம்ப உள்ள இடத்தில் குருடன் ஒருவன் இருக்கிறான். குருடன் வெளிச்சத்தில் இருக்கிறான் என்பதில் ஐயமில்லை. இந்த ஐயமற்ற நிலை விழியுடைய யாருக்கும் விளங்குகிறது. ஆனாலும் குருடனுடைய குருட்டு விழிக்கு இவ் ஐயப்பாடு அகலவில்லை. இப்படித்தான் நாம் அனைவரும் சிவத்தினுடைய வரம்பற்ற வியாபகத்தில் தங்கி இருக்கிறோம். என்றாலும் ஞானிகள் அல்லாத பிறர் யாரும் தாம் தங்கியிருப்பதன் அடிப்படையைச் சிறிதும் உணரவில்லை. இது படலத்தால் மறைப்புண்ட விழியுடைய குருடர் நிலையை நிகர்ப்பது, குருடனுடைய விழிப்படலம் பக்குவம் அடைந்தபிறகு உரித்தெடுக்கப்படுகிறது. அப்பால் படலம் அகன்ற விழிபெற்ற குருடன் குருட்டு இயல்பு நீங்கப் பெற்றுத் தன் இருப்பின் (வெளிச்சத்திடையே இருப்பதாகிய) உண்மை இயல்பை ஐயமறத் தானே விழிவழியால் அறிகின்றான்.

இவ்வாறே, நாம் நம் சமய நூலில் கூறப்பெறும் இருவினை ஒப்பு, மலபரிபாகம், அருள்வீழ்ச்சி நிலை எனப்படும் நிலை (பக்குவகாலம்) எய்திய பின்னர் பக்குவம் பெற்றபின் ஆசாரியன் தோன்றுகிறான். உண்மையைச் சீடன் உணரும் வகையில் தீக்கை முதலிய சமயச் செயல்களைச் செய்து உண்மையை முறையாக சீடன் உணருமாறு செய்கிறான். இந்த நிலை அடையும்போது சகலத்தையும் சிவமாகக் காணும் தன்மையைப் பெறுவர். இந்த நிலை அடைய நாம் உரிய வகையில் பாடுபடவேண்டும்.

மேசையின் மேல் ஒரு விரிப்பு உள்ளது, அவ்விரிப்பின் மேல் நூல் ஒன்று உள்ளது. நூல் எங்குள்ளது? மேசையில் மேல் நூல் உள்ளது என்று கூறுவோம். விரிப்பின் மீது உள்ளதென்று சொல்லமாட்டோம்.

அவ்வாறே விரிப்பின் மீது உள்ள சித்திரத்தின் மேலே நூல் உள்ளதென செப்பமாட்டோம். வெளிப்பார்வைக்கு விரிப்பின் சித்திரத்தின் மேல் நூல் உள்ளது எனத் தெரிகிறது. எனினும் நூலை சித்திரமோ விரிப்போ ஆதாரமாக இருந்து தாங்கவில்லை. அதனால்தான் ஆதாரமான மேசையைக் கூறுகிறோம். மேசையின் வியாபகமே நூலுக்கு ஆதாரமாய் உள்ளது என்று நமது புத்திக்குத் தெரிகிறது.

இவ்வாறே ஆன்மாவாகிய நாம் உலகில் உடம்புள் இருக்கிறோம். ஆயினும் சிவவியாபாகத்துள் இருக்கிறோம் என உணரவேண்டும். மேசை சுட்டுப் பொருள் ஆதலால் கண்ணுக்குத் தெரிகிறது. சிவம் அறிவுப் பொருள். கண்ணால் அறிய முடிவதில்லை. அறிவு கண்ணுக்குப் புலப்படும் அறிவுடைத்தன்று. மேசைக்கும் நூலுக்கும் உள்ள "வேறின்மைத் தன்மை" நமக்கும் சிவத்துக்கும் எப்போதும் நீங்காமல் உள்ளது என்ற உணர்வை நாம் பெறவேண்டும். இந்த உணர்வே சித்தாந்த சைவத்தின் அடிப்படை. "கண்டன எலாம் மோன உருவெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம்" எனும் தாயுமானவர் பாடல் இவ்அடிப்படை உணர்வை ஃசைவர் பெறவேண்டும் என்ற உண்மையை நமக்குத் தெரிவிக்கிறது.

சிவபரம்பொருள் யாவற்றுக்கும் யாவர் நலத்துக்கும் அடிப்படையாய் இருத்தலை நமக்கு நினைப்பு ஊட்டவும், அப்பரம்பொருளே நம்மைத் தாங்கும் ஆதாரமாய் இருத்தலைக் கருதியே திருவள்ளுவர் முதல் அதிகாரத்தின் முதற் குறளில் பகவன் என்று கூறியவர், பின்னர் உள்ள குறட்பாக்களில் மூன்று முறை அடி எனவும், நான்கு முறை தாள் எனவும் கூறினார். அடி என்னும் சொல் மூலமாய் இருத்தலையும் தாள் எனும் சொல் தாங்கும் தன்மையையும் உணர்த்தும் குறிப்புடையன என்று கூறலாம்.

சிவஞானபோத நூலும் குருவாய் உணர்த்துமுறை கூற வந்த எட்டாம் சூத்திரத்தில் **அரன்கழல்** எனவும், சிவப்பேறு கூறவந்த பதினோராம் சூத்திரத்தில் மீளவும் **அரன்கழல்** எனவும் சீவன்முத்த வாழ்வு நிலை இசைக்க எழுந்த 12ஆம் சூத்திரத்தில் **நோன்தாள்** எனவும் குறிக்கப்படுதலால் இவ்வுண்மையை அறியலாம். சித்தியார் ஆசிரியர் அருள்நந்தி சிவமும் "மலரடிக்கீழ் வைப்பன்" என்று கூறுகிறார் என்பதையும் நாம் அறிந்து மகிழலாம். ஆகவே இறைவனைவிட இறைவன்தாள் மிகுந்த சிறப்பைப் பெறுகிறது.

சோமேசர் முதுமொழி வெண்பா என்னும் நூல் திருக்குறள் உண்மைகள் எவ்வாறு சைவத்துக்கு அடிப்படை என்பதையும், திருக்குறள் உண்மைகள் சைவ அடியார் வாழ்வில் எவ்வாறு விளக்கம் பெறுகின்றன என்பதையும் விளக்கும் வகையில் சிவஞானமுனிவர் நமக்கு அருள்கிறார்.

*"வள்ளுவர் நூல் அன்பர் மொழி வாசகம் தொல்காப்பியமே*
*தெள்ளு பரிமேலழகன் செய்த உரை - ஒள்ளிய சீர்த்*
*தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்*
*தண்டமிழின் மேலாம் தரம்"*

என்னும் வெண்பாவில் தமிழின் தலைசிறந்த ஆறு நூல்களில் (வாழ்க்கைச்) சாத்திரத்துக்குத் திருக்குறளும் (பரிமேலழகர் உரையுடன்), தோத்திரத்துக்குத் திருவாசகமும் ஆகிய இரு நூல்களை உமாபதிசிவம் கொள்வதை நாம் அறியலாம்.

சராசரி மனிதனுக்கு - தமிழ் பயிலும் இளைய உள்ளத்துக்குப் புரியும்படி உதாரணத்தை சிவஞான முனிவர் பயன்படுத்துவர். அவ்வுதாரணம்கூட தமிழகச் சைவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளின் தொகுப்பாக இருக்கும்படி செய்து தமது மிகப்பெரிய சிறுநூலாகிய சோமேசர் முதுமொழி வெண்பாவை அமைக்கிறார். திருக்குறளின் சார்பு நூலாகத் தோன்றிய பெரியபுராணம் என வலியுறுத்த விரும்பிய சிவஞான முனிவர் சுமார் 40 இடங்களில் திருத்தொண்டர்களின் வாழ்க்கை வரலாற்றை உமையாகக் காட்டுவதாய்த் தமது நூலை உருவாக்கினார்.

திருவள்ளுவர் முதல் குறளில் கடவுள் என்ற பொருளைச் சுட்ட "பகவன்" என்ற சொல்லை எடுத்தாள்கிறார். "பகம்" என்ற சொல் ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, திரு, ஞானம், வைராக்யம் என ஆறுபொருளை உணர்த்துவதென்பர். வடநூலார்.

*"குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்*
*நிறைமலம் அநாதியே நீங்கி நிற்றலின்*
*அறைகுவன் சிவன் என"*

என்று சிவஞானமுனிவர் காஞ்சிப்புராணத்தில் கூறுவர்.

மேற்சொன்ன ஆறு குணங்களையும் கொள்பவன் சிவபெருமானே எனச் சதுர்வேத தாத்பர்ய சங்க்ரகத்தில் அரதத்த சிவாசாரியார் அறுதியிட்டுக் கூறுவர். அகரம் எழுத்துக்கு முதலாவது போல உலகத்தின் முதலாக ஆண்டவன் ஒருவன் உண்டு என்பதை உணர்கிறோம். அது சிவபெருமானே என்பதைச் சோர்விலா அடையால் தெளிந்தோம் என்பதே செய்யுளின் திரண்ட பொருள்.

(தொடரும்)

# ஆற்றுப்படை அழகர்

(தமிழாகரர். தெ. முருகசாமி)

*"உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்"*

என்பது நெஞ்சையள்ளும் சிப்பதிகாரப் பதிகம் உணர்த்தும் சீரிய மூன்று குறிக்கோள்களில் ஒன்றாகும். இத்தொடர் பெண்மை நலத்தை உயர்த்திக் கூறுவதான சிறப்பை நல்கினாலும் இதில் காப்பியப் பாடுபொருட்கேற்பக் கண்ணகியைக் குறிக்காமல் பொதுப்படப் பெண்டிரைச் சுட்டுமளவில் பத்தினி என உரைத்த பாங்குதான் சிலப்பதிகாரத்தை நெஞ்சையள்ளச் செய்கிறது. ஏனெனில் பத்தினி என்றால் கண்ணகியை மட்டுமே உணர்த்தாமல் அவள் போல் வாழும் எந்தப் பெண்ணும் பாராட்டுக்குரியவரே என்ற பொதுமைப்பண்பை அந்த நீதித்தொடர் சுட்டுவதால்தான் ஒரு குறிப்பிட்ட எல்லையைத் தாண்டிய பார்வைக்குரியது இலக்கியம் என்ற பேருண்மையை உணர்த்தும் மிளிர்வுடன் ஒளிர்கிறது சிலப்பதிகாரம்.

இங்ஙனம் பெண்மைக்குள் பெண்மை நலம் போற்றுதற்குரிய சொல்லாகப் பத்தினி என்ற செஞ்சொல் இருந்தாலும் இச்சொல் ஆண் என்ற ஒன்றைக் கருதத் தூண்டும் கருத்துக்கும் இடம் கொடுப்பதால் இத்தொடரை "உரைசால் ஆடவரை உயர்ந்தோர் ஏத்துவர்" என மறுவாசிப்பாகக் கூறினும் தகும் எனலாம் என்க. ஏனெனில் ஒருமொழி ஒழிதன் இனங்கொளற்குரித்தே என்ற நன்னூலின் இலக்கணப்படி (பொதுவியல் 3)ப் பத்தினி என்ற பெண்பாற் சொல் உத்தம ஆடவராம் ஆண்பாற் சொல்லையும் அவாவி நிற்கிறது என்பதால் உரைசால் ஆடவரை உயர்ந்தோர் ஏத்துவர் என்ற வாசக உருவாக்கத்தைக் கொள்ளலாம் என்க!

ஆக இலக்கண விதிப்படி அமையும் இத்தொடர்ப்பொருளுக்கேற்பத் தமிழ்கூறு நல்லுலகில் பலரை அடையாளம் காட்டும் வரிசையில் - சிதம்பரம், சிவநெறிச் செல்வர், சேக்கிழார் சீர்பரவும் செம்மல், சால்புறு க. சாமிநாதச் சான்றோரும் ஒருவராவார்! அய்யன் திருவள்ளுவர் கூறும் நூறாவது அதிகாரமாகிய பண்புடைமைக்கான ஒட்டுமொத்தச் சான்றாய்த் திகழும் அவர்கள் நூற்றாண்டை எட்டும்படியாய்த் தொண்ணூறாண்டு அகவையராக உள்ளார்கள்.

நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம் என்றதற்குரிய பண்பில் தேசிய அளவிலும் மாநில அளவிலும் நல்லாசிரியர் விருது பெற்ற விருதாளராய், தெய்வீகத் தொண்டில் சிவம்பெருக்கும் சீலராய், சேக்கிழாரின் ஞானத்தமிழில் தம்மைப் பறிகொடுத்த உள்ளத்தவராய் வாழும் அவர்கள் தமது தொண்ணூறாம் ஆண்டு அகவை விழாவை 9.3.2014ல் கொண்டாடினார்கள். இல்லை! இல்லை! சிதம்பரமே கொண்டாடியது.

இவ்விழா எடுப்பில் பொற்குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்த்ததைப் போலத் தாம் இல்லறம் ஏற்று நன்மக்கட்பேற்றுடன் பேரன் பேத்தித் தலைமுறையினர் மகிழ வாழும் வாழ்க்கை நிறைவான மணவிழாவின் அறுபதாம் ஆண்டும் ஒருசேர அமைந்ததால் தொண்ணூறும் அறுபதுமான விழாக்களை அருள்மிகு சிவகாமி அம்மன் உடனாய நடராசப்பெருமான் அருளால் மருத்துவ மனைவியாம் (டாக்டர்) திருமதி.பழனியம்மாளுடன் சிவத்திரு க. சுவாமிநாதச் சான்றோர் சுற்றமும் நட்பும் சூழக் கொண்டாடி மகிழ்ந்தனர்.

இத்தகு சான்றோரின் வாழ்வு - சமூகத்திற்கு எடுத்துக்காட்டானது என்பதை (ROLL MODEL) உணர்த்தும் பாங்கில் முதுபெரும்புலவர் இலால்குடி ப.அரங்கசாமி அவர்கள் "சுவாமிநாதர் ஆற்றுப்படை" என்ற நூல் ஒன்றை நெய்து விழாத் தம்பதியர்க்குப் போர்த்தி மகிழ்ந்தார்கள்.

"நட்டோரை உயர்வு கூறல்" என்ற புறநானூற்றின்படித் தம் அகவை ஒத்த நண்பரைப் பாராட்டும் வகையில் இலால்குடியார் அவர்கள் ஆற்றுப்படையால் நண்பரை மகிழ்வித்தாலும் அப்பண்பு "உரையும் பாட்டும் உடையோர் சிலரே" என்ற புறநானூற்றுத் (27) தொடருக்கும் பொருள் பொருத்தம் உடையது எனலாம், மேலும் புலவர் பாடும் புகழுடைமையைப் போற்றும் புறநானூற்றின் படியும் (72) அமைந்தது எனலாம்.

செம்மொழி இலக்கியப் பரப்பில் ஆற்றுப்படை நூல்களும் உண்டு. அப்பழமையைப் பேணும் வகையில் புதுவரவாகத் தமிழுக்கு அமைந்த செந்நூல்தான் க. சுவாமிநாதர் ஆற்றுப்படையாகும். நூலை அழகிய ஆசிரியப்பாவில் செஞ்சொற் பதங்களாக அடுக்கப்பட்ட நிலையில் அமைந்த பாநலம், கற்போரைக் கவர்வதாக உள்ளது. நூலின் தலைமகனாம் சுவாமிநாதர் வாழும் சிதம்பரம் பற்றிய சிறப்புகள் 55

வரிகளில் பாடப்பட்டுள்ளன. தில்லைப் பதியாம் சிற்றம்பலந்தான் சிதம்பரம் என்கிறார் கவிஞர். தில்லை மரங்கள் சூழ்ந்திருந்ததால் தில்லைவனமாகப் பெயர்பெற்ற ஊர் - காலப்போக்கில் ஆன்மீகவளர்ச்சியில் சிற்றம்பலமாயிற்று. சித்தாந்தத் தத்துவப்படியான சிற்றம்பலமே சிதம்பரமானது.

பழைய சமய இலக்கியங்களில் சிற்றம்பலம் உண்டு; சிதம்பரம் இல்லை. தில்லையும் சிற்றம்பலமும் பழமையானாலும் அவற்றிற்கு முன்னர் பொன்னம்பலம் என்பதே வழக்காறாக இருந்துள்ளது எனினும் புதுப்பெயராய் பொலிவுபெற்றுவிட்ட சிதம்பரத்தின் பக்கத்தில் வந்த புதியவரான ஒருவரைச் சிதம்பரத்தார் ஒருவர் சந்திப்பதான ஆற்றுப்படைப் பொருள்தான் நூலின் தொடக்கமாக அமைகிறது.

ஐயா! தாங்கள் யாரோ? என வினவ, வந்தவர் திருச்செந்தூரினன், தென்னவன்எனும் பெயரினன் என்றதோடு, திருமுறையறியவும் சிவனடியார் வரலாறுணரவும் சைவசித்தாந்த விளக்கம் பெறவும் சிதம்பரம் வந்ததாய்க் கூறினார்.

வந்தவர் கூற்றிலமைந்த இவையாவும் ஒருங்கே உணர்ந்து தெரிவிக்கவல்ல வித்தகர்கள் நிறைந்த ஊர் சிதம்பரம் என்பதை நூலாசிரியர் குறிப்பாகப் பதிவு செய்தது பாராட்டுமாறுள்ளது.

மேலும் வந்தவர், தம் ஐயம் போக்கவல்ல தக்கார் ஒருவரைக் காட்ட விழைந்த விருப்பின்படி அன்னாரைச் சந்தித்த சிதம்பரத்தார், சான்றோர் சுவாமிநாதரை அறிமுகப்படுத்திக் கூறும் பகுதிதான் நூலின் கருப்பொருள் உயிர்ப்பாக உள்ளது. நூலின் நூறாவது வரியிலிருந்து நூலின் இறுதிவரையான 241ஆம் வரியீறாக நூற்று நாற்பத்தோர் வரிகள் (141) நூலின் பாடுபொருளரான சுவாமிநாதரின் வாழ்க்கை வரலாறு கூறப்பட்டுள்ளது.

சைவமும், தமிழும் இருகண்களாய்க் கொண்டவர் அவர், சிதம்பரத்தில் ஆறுமுகநாவலரின் பெயரில் அமைந்த பள்ளியில் பல்லாண்டு கல்விப்பணிபுரிந்தவர். திருக்குறள் பரப்பும் பணி, தெய்வச் சேக்கிழார் அறக்கட்டளைச்சேவை, திருமுறைத் தொண்டு, சைவ ஆதீனத்தொடர்புகள் போன்ற இன்பத் தொடர்புகளால் சிதம்பரம் நகர மக்களின் மனதில் நீங்கா இடங்கொண்டவர் போன்றவற்றை அடுக்கிக் கூறியதோடு சிதம்பரக் கூத்தனின் அருளுக்குப் பாத்திரமானவராதலால் தாம் வாழும் தேரோடும் தெற்குத் தெருவில் இருக்கும் வீட்டிற்கு "ஆடல் அகம்" எனப் பெயரிட்டு வாழ்ந்து வருகிறார்.

அன்னாரின் மனைவியாம் திருமதி. பழனியம்மாள் அவர்கள் வள்ளுவர் கூறும் வாழ்க்கைத் துணைநலம் மிக்கவராவார். புகழ்மிக்க மகப்பேறு மருத்துவர். அவரோடிணைந்த வாழ்வில் நன்மக்கட்பேறு பெற்றவர். ஆண்மகன்கள் இருவரும் மருத்துவர்கள். மருமகள்கள் இருவரும் மாமியார் பழனியம்மாளைப் போன்ற மருத்துவர்கள். ஒரே மகளான பத்மினியும் அவர்தம் கணவரும் மருத்துவர்கள். ஆக சமய மருத்துவராய் சுவாமிநாதர் விளங்குதற்கேற்ப அவர்தம் குடும்பத்தார் அனைவரும் சமூகச் சேவைக்கான மருத்துவர்கள் என்பதால் திருச்செந்தூரிலிருந்து வந்தவரை ஆற்றுப்படுத்தும் சிதம்பரத்தார் சுவாமிநாதரிடம் போனால் உள்ள நலத்திற்கும் உடல் நலத்திற்கும் மாமருந்துகள் கிடைக்கும் என்ற குறிப்போடு மருத்துவநல மாண்போடு நூலின் தலைவரைக் கவிஞர் அறிமுகப்படுத்தியது புத்தம் புதிய பாடுபொருள் பாங்காக உள்ளது. இவற்றிற்கெல்லாம் பெருமை கூறும் மகுடமாக நூலாசிரியர் கீழ்க்கண்டவாறு கூறிப் பாராட்டும் வரிகள் சத்தியவாக்காக அமைந்துள்ளன.

*மாந்தர் போற்றும் மதிவளம் நிறைந்த*
*சாந்த மூர்த்தி சத்திய வாழ்வினர்* (171-172)

ஈர்ப்புடைய இந்த இருவரிகளுக்குள் எல்லாம் அடக்கம் என்றால், மிகையில்லை. இவ்விருவரிப்பொருள் நுட்பமே என்னை இக்கட்டுரையின் முதலில் "உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்" என எழுதிக் காட்டிய வரியை இலக்கணச் சாயலாய், சிலப்பதிகாரப் பதிகத் தொடரின் மறுவாசிப்பாய் உணர எனக்கு உண்மை உணர்த்தியது எனலாம். எனவே சுவாமிநாதர் வாழ்வு திறந்த புத்தகம் போன்றது. அதில் எதிர்மறைக்கு இடமே இல்லை. யாண்டு பலவாக நரை இல ஆகுதல் என்ற 191 ஆம் புறநானூற்றுப் பாடற்பொருண்மைக்குரிய பெற்றியர் எனப் பாராட்டுகிறது இந்நூலாம் என்க!

*"யாண்டு பலவாக நரைஇல ஆகுதல்*
*யாங்காகியர் என வினவுதி ராயின்,*
*மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்,*
*யான்கண் டனையர் என்இளையரும், வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும், அதன்தலை*
*ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!"*

பிசிராந்தையாரின் இப்பாடல் மேற்படி ஆற்றுப்படை, நாயகர்க்கு முற்றிலும் பொருள் பொருத்தமுடையதாகும். சுவாமிநாதரின் மனைவி மாட்சிமை பொருந்திய மருத்துவ மேலாண்மைத் திறம்மிக்க வாழ்வரசியாவார். அன்னாரின் ஐம்பதாண்டுக்கால மருத்துவ வாழ்வில் எவ்வித உயிரிழப்பும் இல்லாத ஐம்பதாயிரம் மகப்பேறுகள் (பிரசவங்கள்) பார்த்த பெருமைக்குரியவராய் கணவருக்கும் குடும்பத்திற்கும் மாட்சிமை சேர்த்த மங்கலப் பெண்மணி ஆவார். இத்தம்பதியரின் ஆண் இருவர் பெண் ஒருவரான மூன்று மக்களும் சிவபக்தியில் திளைத்தவர்கள். தந்தையனையர் தனையர் (மக்கள்) என்றற்கேற்ப "இவர் பெற்றோர் எந்நோற்றார் கொல்" எனப் புகழுமாறு கல்வியால் மருத்துவத் தொழிலால், கைப்பிடித்து மணந்து கொண்டோரால் பெற்ற இல்லற வாழ்வால், பிறந்த இடத்திற்கும் புகுந்த இடத்திற்கும் பெருமை சேர்ப்பவர்ள் ஆவார்கள். அவர்கள் தந்த வழிவழியான கன்றும் கனிஉதவும் என்ற படிக்கேற்ற வாரிசுகளால் சுவாமிநாதர் பழனியம்மாள் தம்பதியர் பெருவாழ்வு வாழ்வதின் பதிவாகவே மேற்படியான புறநானூற்றின் மறுவடிவமாக ஆற்றுப்படை நூல் அமைந்துள்ளது எனலாம்.

நூலுள் உவமை, உருவகம், கற்பனை போன்ற எந்த மிகையும் இல்லாமல், "உள்ளது சிறத்தல்" என்றபடி "உள்ளதை உள்ளவாறே கூறல்" என்னும் இயல்பு அணி இலக்கணத்தோடு எழுதப்பட்ட இந்நூல் அழகிய எதுகை மோனை யாப்புடன் ஆற்றொழுக்குப் பொருள்கோளுடன் எழுதப்பட்டுள்ளது. நிலைமண்டில ஆசிரியப்பாவால் பாடப்பட்ட நூலின் இடையில் ஈரசையாலமைந்த "ஐய" என்ற ஒருசீரும், வழியிடைக் கண்டவர் என்றும் வழியிடை வந்தோய் என்றும் இருசீர்த்தொண்டர்களும் பாடலின் வரி எண்ணிக்கையில் அடங்காமல் சில இடங்களில் காணப்படுதலால் ஆசிரியப்பாவின் நடை இணைகுறள் ஆசிரியப்பாவாகவும் கருதுமாறு உள்ளது. 239 ஆம் வரிக்குப் பின் அவ்வளவில் என்ற தனிச்சொல், செய்யுளில் அமையும் "கூன்" உறுப்பாகப் பாடப்பட்டதாகத் தெரிவது ஆற்றுப்படை பாடும் பாநலத்தின் புதுமையாக உள்ளது னெலாம்.

ஆக ப. அரங்கசாமி அவர்களால் பாடப்பெற்ற சீலமிகு சிவத்திரு.சுவாமிநாதர் – பழனியம்மாள் மரகத வைரவிழாப் பதிவான ஆற்றுப்படை நூல் பொருளாலும் பாடப்பட்ட பாங்காலும் தமிழுக்குப் புதுவரவு எனலாம்.

---

# தமிழ்த் திருமுறை போற்றிய தனிநாயக அடிகளார்

(தருமையாதீனப் புலவர்.வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

*"தேவார திருவாசகம் முதலிய நூற்கள்*
*மனதை உருக்குவதாக உள்ளன.*
*இறைவனை வழிபடும் எந்த மதமும்*
*அந்த நூற்களைப் பாராட்டாமல்*
*இருக்க முடியாது"*

இவ்வாறு கூறியவர் தனிநாயக அடிகளார் என்று அவரது வரலாற்றில் பதிவு செய்துள்ளார் தமிழ்ப்பல்கலைக்கழக முன்னை முதல் துணைவேந்தர் திரு.வ.அய்.சுப்பிரமணியம் அவர்கள். தமிழராய் வாழ்கின்ற பலருக்கு ஏன்? தமிழால் வாழுகின்ற பலர்க்கும் இல்லாத திருமுறைத்தாகம் ஒரு கிறித்துவப் பாதிரியாருக்கு ஏற்பட்ட பற்றும் தாகமும் வியப்பைத் தருவதாகும்.

**அடிகளின் தனித்தன்மை :**

துணைவேந்தரோடு அண்ணாமலைப்பல்கலையில், பயின்ற ஒரு சாலை மாணாக்கர் தனிநாயக அடிகளார். அடிகள் தமிழ் படிப்பதற்கு முன்பே, வாடிக்கனில், குருமார்களுக்குரிய வகுப்புகளில் நான் காண்டு பயின்று முனைவர் பட்டம் பெற்றவர். தமது ஆய்வறிக்கை கிறித்துவத் தொண்டர் பலரைப் பற்றியதாகும். இதை நூலாக்கித் தமிழ் படிக்க வந்தபோது, திருத்தொண்டத் தொகையும், பெரியபுராணமும் சைவசமயத் தொண்டர் வரலாறறிந்து வியப்புற்றாராம். அடிகள், ஸ்பானிய மொழி, ரோம மொழி, போர்த்துக்கீசியம், பிரெஞ்சு, முதலிய மொழிகளில் சரளமாக உரையாடவும், சொற்பொழிவாற்றவும் வல்லவர் என்று குறிப்பிடுவார். அடிகள், அண்ணாமலையில் சேருவதற்கு முன்னர், நெல்லை மாவட்ட வடக்கன்குளம், கிறித்துவப் பள்ளியில் நாலாண்டு ஆசிரியர் பணி நிறைவு செய்யும்போது, தமிழில் போதிய அடிப்படை அறிவு பெறும் வாய்ப்புக் கிட்டியதாகக் குறிப்பிடுவார்.

**துணைவேந்தரின் பதிவுகள் :**

அடிகள், கிறித்துவப் பாதிரியாயினும் தன்னோடு தோழமையாகப் படித்த நம்வரலாற்றாசிரியர், வ.அய். சுப்ரமணியத்திடம் தம் மதத்தின் பெருமையையோ, இந்து மதத்தின் குறைபாடுகளையோ என்றும் கூறியதில்லை என்று பதிவு செய்வார். அதற்கு நேர்மாறாகத், தேவார திருவாசகத்தின் பெருமையைக் கூறிப் பாராட்டியது இன்றும் நினைவிருக்கிறது என்று வ.அய்.சு. குறிப்பிடுவார். யாழ்ப்பாணம் பிரபல இந்துக் குடும்பத்தில் பிறந்தவர். கிறித்துவக் குருமார் நிலையைத் தாமே தேர்ந்து கொண்டார். பல்கலைக்கழக நூல்நிலையப் படிப்பில் ஆர்வம் மிக உடையவர், அடிகளார்.

**ஆய்வுச் செய்திகள் :**

ஒரு சமயம் வ.அய்.சு. அவர்களிடம், அடிகளார், ரிக்வேத ஆங்கிலமொழி பெயர்ப்பை படித்துமுடித்திருந்ததாகவும், "தரமான பாக்கள்" ரிக் வேதத்தில் குறைவாகக் காணப்படுகின்றன என்றும், அவற்றை நோக்க, சங்க இலக்கியப் பாக்கள் எவ்வளவோ மேல், என்றும் கூறியதை வரலாற்றில் பதிவு செய்ததோடு, அடிகளார் நான்கு வேதங்களையும், தமிழில் ஜம்புநாதன் மொழிபெயர்ப்பையும், ஆங்கிலத்தின் மொழி பெயர்ப்பையும் படித்தாய்ந்துள்ளார் என்றும் குறிப்பிடுவார். கிறித்துவப் பாதிரியான, அடிகள் இந்து வேதங்களைப் படிக்க எப்படி அனுமதிக்கப்படுகின்றார் என்ற வினாவிற்கு அவர் தந்த விடை அறியத்தக்கது.

"எல்லா மதங்களின் அடிப்படை நூற்களையும் நாங்கள் படித்துத் தெளிவோம்; அதுமட்டுமன்று; பிரம்மசரியம் மேற்கொள்ளும் நாங்கள், காதல்நிலை பற்றிய பல நூல்களையும் படிக்க வேண்டிய கட்டாயம் உண்டு. பல துறைகளைத் தெரிந்த பின் துறவு பூண்பது, தெரியாமல் துறவுபூண்பது என்ற இரண்டில், முதல் முறையை நாங்கள் கடைப்பிடிப்போம்" என்பது அடிகளின் வாக்குமூலமாகும்.

**அடிகளாரின் தனித்தன்மை :**

தனிநாயக அடிகளின் பரந்த படிப்பும், பிறமதங்களைப் புறக்கணிக்காத, நிலையும் வ.அய்.சு. அவர்களைக் கவர்ந்தது என்றும், கிறித்தவ மதத்தில் ஆழமான பற்றுடையவராயினும், தமிழ்மொழி மீதும், தமிழ்க் கலாச்சாரத்தின் மீதும் அளவற்ற மதிப்புடையவராக இருந்தார் என்றும், அடிகளாரின் நட்பைப் போற்றுவார். வ.அய்.சு. ஆய்வுச் சம்பளம் வெகு குறைவாக இருப்பதை அறிந்து, ஒரு சமயம் அடிகளார் காசோலை மூலம் உதவியதையும் பதிவு செய்துள்ளார். "அடிகளார்" "சங்க இலக்கியத்தில் இயற்கை" - என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். அவ்வாய்வு அச்சாகி தமிழ் ஆர்வலரிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது என்றும் பதிவு செய்துள்ளார். "தமிழ்ப் பண்பாடு" என்ற அரையாண்டு இதழ் வெளியிட்டார்.

**உலகத் தமிழ் மாநாடு :**

உலகத் தமிழ் மாநாட்டின் தந்தை அடிகளார். அவரது நினைவில் உருவாகிய இம்மாநாடு, அயல்நாட்டு மொழிவல்லாரை எல்லாம் ஒன்றுகூட வைத்து உலகளாவிய ஆய்வுக் கட்டுரைகளால், தமிழ் மொழி சிறப்படைந்தது. உலகத் தமிழ் மாநாடு மதுரையில் 1981ல் நடந்தபோது அடிகளார் காலமானார் என்று வ.அய்.சு. பதிவு செய்வார். **தமிழ்மொழி பழமையானது. அதன் சங்க இலக்கியம் ஏற்றமுடையது. அதன் பக்தி இலக்கியம் மனதை உருக்கும் இயல்புடையது. சிலப்பதிகார காவியம் உலக இலக்கியங்களில் சிறப்பிடம் பெறத்தக்கது என்று பிறநாட்டார் அறிந்திடச் செய்தவர் அடிகளாவார்** - என்பது ஆய்வு முடிவாகும். உலகத் தமிழ் மாநாடு மலேசியாவில் தொடங்கி, அதன் பின்னர் சென்னை, பாரீஸ், யாழ்ப்பாணம், மதுரை முதலிய இடங்களில் நடத்துவதற்கு வழிகாட்டியாக நின்றவரும் தனிநாயக அடிகளாவார். கால்டுவெல், டாக்டர் போப் ஐயர், வரிசையில், தமிழுக்கும் திருமுறைத் தமிழுக்கும் பெருமதிப்பு கொடுத்த அடிகளை, நாம் நன்றியுடன் நினைவுகூர்ந்து போற்றுவோமாக.

---

# மரம்

(கவிஞர். அ.சொ. சண்முகம்)

நீ.... எப்படி இருந்தாலும்
எங்களைச் சரியாகவே
சுவாசப் படுத்துகிறாய்!
உயரமாய், குள்ளமாய், படர்கையாய்

வெட்டித் துண்டாக்கி
வீதியில் போடுவோரை
சட்டம் தண்டித்தாலும்
அவர்களுக்காகவும் நீ.... துளிர்க்கிறாய்!

உயிர் வளி தந்து
உற்சாகப் படுத்தும் நீ....
கரிவளியை உள்வாங்கி யன்றோ
கடமை யாற்றுகிறாய்!

தாய் போலவே
உயிர் வளர்க்கிறாய்
நாங்கள் தோன்றுதற்கு
முன் தோன்றி.

குளிர் நிழல்தந்து
தந்தையாய்த் தாங்குகிறாய்
பரிதியின்
வெம்மையைத் தாங்கிக் கொண்டு

வாழவைக்கும் வானத்திற்கு
தலையசைக்கும் நீ....
பூவுலக மாந்தர்க்குப்
புரிய வைப்பாயா?

“நன்றி மறப்பது
நன்றன்று” என்ற
வள்ளுவன் வார்த்தைக்கு
விளக்கமாய்!

# ஒட்டாரை ஒட்டிக் கொள்வோம்

- (19.07.2014. ஆம் நாளன்று நடைபெற்ற 146-ஆம் "சிந்தனை நந்தவனம்" நிகழ்ச்சியில் தவத்திரு குருமகாசன்னிதானம் பொன்னம்பல அடிகளார் ஆற்றிய உரையின் சுருக்கம்)

திருக்குறள் அரசுகளும் போர்களும் நின்று நிலவிய காலத்து இலக்கியம்; அப்படிப்பட்ட காலத்து இலக்கியம் இன்று நாம் வாழும் காலத்துக்கும் பொருந்தியே அமைகிறது. பழைய முறையிலான ஆயுதங்கள் இன்று நம்மிடையே இல்லை; ஆனாலும் நாம் வேறு, வேறு ஆயுதங்களோடு போரிட்டுக்கொண்டுதான் இருக்கிறோம்; வேறு வேறு வாழ்க்கைச் சூழ்நிலைகளோடு போரிட்டுக்கொண்டுதான் இருக்கிறோம். திட்டமிட்டு, ஓர் இலக்கு நோக்கி, நமது வாழ்க்கைப் பயணத்தை நகர்த்திக் கொண்டு போவதே நமக்கு ஒரு போர்க்களம் போலவே ஆகிவிட்டது. திட்டமிட்டுக் கொண்டு ஓர் இலக்கை நோக்கிச் சென்று வெற்றிபெறுவது எப்படி என்று வள்ளுவர் நமக்கு வழிகாட்டுகிறார்; அதுதான் "வினை செயல்வகை" என்னும் அதிகாரம்.

திட்டமிட்ட இலக்கு நோக்கி நமது வாழ்க்கைப் பயணத்தை நகர்த்திச் செல்வதற்குச் செயல்பாடு மிகவும் முக்கியம்; துணிதல் மிகவும் முக்கியம்; தாமதம் இன்றிச் செயல்பாக அமைவது இன்னும் முக்கியம்; நின்று, நிதானித்து, யாருக்கும் துன்பம் நிகழ்ந்துவிடாமல் செயல்படுவது முக்கியம்; இமைப்பொழுதும் சோர்ந்து விடாதிருத்தல் முக்கியம்.

இன்றைய நமது மக்களின் வாழ்வியல், செயல்பாடுகள் எப்படி இருக்கின்றன? மக்கள் சோம்பிக் கிடக்கிறார்கள்; நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள்; ஏன், எதனால் என்று நாம் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்; சமுதாயத்தில் இன்றளவும் நிலவுகின்ற கல்வியின்மை என்ற இரங்கத்தக்க நிலைதான் இதற்குக் காரணம்; தாமதம், அல்லது தாழ்ச்சி, அல்லது செயல்பாடின்மை அல்லது சோர்வு

என்பன இன்று மிக முக்கியமான, மக்கள் சார்ந்த துறைகளிலும் கூட நிலவக் காண்கிறோம். மருத்துவம் எவ்வளவு பெரிய துறை! நீதி எவ்வளவு பெரிய துறை! அங்கேயும் கூட தாழ்ச்சி, தயக்கம், செயலின்மை என்றெல்லாம் வந்துவிட்டதே! எதிர்பாராமல் நிகழ்ந்துவிட்ட ஒரு விபத்தில் சிக்கிக் கொள்கிற மக்களைக் காப்பாற்ற மருத்துவர் ஒருவர் எப்படியெல்லாம் விரைவாகப் பாடுபடவேண்டியிருக்கிறது! அப்படி அந்த மருத்துவர் பாடுபடும் அந்தத் துரிதமான நேரத்தை நாம் (Golden hour) என்றல்லவா மதிப்பீடு செய்து போற்றுகிறோம்! அப்படிச் செயல்படும் நேரத்தில் இடையூறுகள், குறுக்கீடுகள், ஏன் அச்சுறுத்தல்களும் கூட வரத்தான் செய்யும். ஆனால் துணிந்து செயல்பட வேண்டும்; உரிய மாற்றுப் பாதை எது? என்று தேர்ந்துகொண்டு அதன் வழியேயும் சென்று செயல்பட வேண்டும்; ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி இடையில் நின்றுவிடுதல் கூடாது; தொடர்ந்து செயல்பட வேண்டும். ஊசலாட்டங்கள் தவிர்த்து, இதில் நமக்கென்ன லாபம் என்ற நினைப்பும் தவிர்த்து நாம் செயல்பட்டாக வேண்டும்.

அப்படிச் சமுதாயத்தில் நாம் இறங்கிச் செயல்படுகிறபோது நாம் சிக்கல்களையும் தீமைகளையும் சந்திக்க நேரும். அந்த வேளைகளில் நமது செயல்பாடுகள், வினைப்பாடுகள் தீர்க்கமானவையாகவும், அறம் சார்ந்தவையாகவும் இருக்கவேண்டும். ஒல்லும் வாயெல்லாம் வினை நன்றே; ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செயல் என்கிறார் வள்ளுவர். இராமன்- வீடணன் சந்திப்பை இங்கே நினைத்துப் பார்க்கிறோம். அந்த நேரத்தில் இராமனின் வினையாற்றல் எவ்வாறு இருந்தது என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கிறோம். எதிரே வந்து நிற்கும் வீடணன் எதிர்முகாமிலிருந்து வருகிறவன்; அவனைச் சேர்த்துக் கொள்ள வேண்டாம் என்று ஏறத்தாழ அனைவரும் எடுத்துரை செய்கிறார்கள். அனுமன் மட்டுமே சார்பாகப் பேசுகிறான். சூழ்நிலைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது வீடணனைச் சேர்த்துக் கொள்வது நல்லது என்று காணப்படவில்லை; ஆனால் இராமனது சிந்தனைப் போக்கு அவ்வாறு அமையவில்லை; இராமன் தனது அறச்சிந்தனையால் சூழ்நிலையை வெற்றி கொள்கிறான். சூழ்நிலை எதுவானாலும் அறம், உடன்பாட்டுச் சிந்தனையே முதன்மை பெறவேண்டும் என்பதை இங்கே நாம் காண்கிறோம்.

வள்ளுவத்தின் இந்த அதிகாரம் வாழ்வியலில் தீமையை எவ்வாறு எதிர்கொள்வது என்று நமக்கு நுட்பமாக உணர்த்தும் அதிகாரம் எனக் கொள்ளலாம். தீமையை எதிர்ப்பதான போராட்டம் வாழ்வியலில் தவிர்க்க முடியாதது என்பது வள்ளுவர் அறிந்ததே; அறிந்துதான் இப்படி ஓர் அதிகாரம் அமைக்கிறார். தீமையை எதிர்த்துப் போராடும்போது அந்தத் தீமையை முற்றுமாக அழித்துப்போட்டுவிடு, அதாவது நெருப்பின் எச்சம் இல்லாமல் அழிக்கப்படவேண்டியது போல், பகையின் எச்சம் சிறிதுமின்றி அழிக்கப்படவேண்டும் என்றும் கூறி எச்சரிக்கிறார். பகையை எதிர்த்துப் போராடுகிற பாதைகளில் பல்வேறுவித மாற்றுப் பாதைகளும் உள்ளன என்பது வள்ளுவர் கூறும் அறிவுரை அல்லது அறவுரை ஆகும். தீமையை அறமாக மாற்றவும் கூடுமானால் மாற்றுக என்பதும் வள்ளுவர் கருத்தாக அமைகிறது; இந்த வாழ்வியல் போராட்டத்தில் வெகு நிதானமாகச் சிந்தியுங்கள் என்பதும் வள்ளுவர் கருத்தாக அமைகிறது; இந்த அதிகாரச் சிந்தனையின் முடிநிலையாக, ஒரு நல்ல மாற்றுப்பாதையாக, அறம் சார்ந்த நிலைப்பாடாக வள்ளுவர் வலியுறுத்துவது ஒட்டாரையும் ஒட்டிக் கொள்க! என்பதாகும்; வெட்டிக் கொண்டே போவதை விட, வாய்ப்புக்களை உருவாக்கிக் கொண்டு ஒட்டாரையும் ஒட்டிக்கொண்டு வினையாற்றுவதே சிறப்புக்குரியது.

– உரையின் சுருக்கச் செய்தி எழுதியவர் நமது செய்தியாளர்:

(இராகுலதாசன்)

பாராளுமன்றத்தில் கேள்வி நேரம்... பிரதமர் பதில் அளிக்க வேண்டிய கேள்விகள் வந்தன. உடல் நலம் பாதித்த நிலையில் நேருஜியால் எளிதாக எழுந்திருக்க இயலவில்லை. பாராளுமன்றத்தில் இருந்த அனைத்துக் கட்சிகளின் உறுப்பினர்களும் அவரை உட்கார்ந்தபடியே பதில் சொல்லும்படி ஒருமுகமாகக் கேட்டுக்கொண்டார்கள். ஆனால், நேருஜி அதை மறுத்ததோடு, "இந்த நாட்டின் மிக உயர்ந்த இடம் பாராளுமன்றம்தான்! பாராளுமன்றத்தின் மரபுகளைத் தவறாமல் கடைப்பிடிக்கவேண்டும்" என்று கூறினார். நேருஜி போன்ற தலைவர்கள் பாராளுமன்றத்துக்குக் கொடுத்த பெருமை என்ன! உயர்வு என்ன! இன்று நாம் பாராளுமன்றத்துக்கும், சட்டமன்றத்திற்கும் கொடுக்கும் மரியாதை என்ன?

**- அருள்நெறித்தந்தை**

(மண்ணும் மனிதர்களும் 164-165)

# உலக மெய்யியலும் திருக்குறள் மெய்யியலும் - தொடர்

## 27. தமிழர் மெய்யியல் - திருக்குறள் மெய்யியல்

(தமிழாகரர்.சித்தாந்த நன்மணி. முனைவர். கா. அரங்கசாமி)

**முன்னுரை :**

திருக்குறள் மெய்யியல் முற்ற அறியத் திருக்குறளின் மாந்த நேயத்தை நாம் அறிதல் வேண்டும். திருக்குறள் சிறந்த மாந்த நேய நூல் என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. ஆயினும் நாம் சிலவற்றை மட்டும் இங்குக் காண்போம். திருக்குறள் மனிதர்களைப் பதினெட்டு வகையாகப் பகுத்து ஆயும். எனவே திருக்குறளில் வரும் பதினெட்டு வகை மாந்தர்களை முதலில் காண்போம்.

**திருக்குறள் கூறும் பதினெட்டு வகை மாந்தர் :**

உலகியல் ஈடுபாடு கொண்ட குறைமாந்தர் முதல் தெய்வநிலை பெற்ற உயர் மாந்தர் வரை திருக்குறள் கூறும். தாழ்ந்தோர், உயர்ந்தோர் சமநிலையில் இருக்கக் காணலாம். தாழ்ந்தோர் ஒன்பது வகையினர். அவர்களைத் திருவள்ளுவர் கூறும் - மொழியில் கூறுவோம். 1. பிணம் (செத்தாருள் வைக்கப்படும் 214) 2. அலகை (பேய்) (அலகையா வைக்கப்படும் - 850) 3. பதடி (பதடி எனல் 196) (மாந்தர் போல் இருப்பர் ஆனால் மாந்தர்க்கு உரிய பண்பு இல்லாதார்). 4. களர் நிலம் (தானும் கெட்டு தன்னிடம் வருவாரையும் கெடுப்பார் 406), 5. மரம் (மரத்தளவு பயன் தருவார் 997). 6. பாவை (407) 7. சிறியர் (சிற்றினத்தர்) அதிகாரம். 46. 8. பண்பு இல்லாதவர் (அதிகாரம் 100) 9. கயவர் (அதிகாரம் - 108) மற்றும் விலங்கு நிலை மாக்கள் (410) என்பன பற்றிக் கூறிடக் காண்க. மற்றும் உயர்ந்தோர் பற்றித் திருக்குறள் கூறுவதையும் நாம் காணலாம். உயர்ந்தோர் தம் கடன் தாழ்ந்தோரைத் திருத்துதல் என்பது யாவரும் அறிவர்.

**உயர்ந்தோர் ஒன்பது வகையினர் :**

நீத்தார் பெருமை அதிகாரத்தும் அறன்வலியுறுத்தல் அதிகாரத்தும் கூறும் இவர்களைப் பட்டியல் இட்டுக் காணல் வேண்டும்.

1. நீத்தார், 2. துறந்தார், 3. அறம் பூண்டார், 4. ஐந்து அவித்தோர், 5. பெரியர், 6. நிறைமொழிமாந்தர், 7. குணமென்னும் குன்று ஏறி நின்றார். 8. அந்தணர். 9. பண்பு உடையார் (அதிகாரம் 100) மற்றும் சான்றோர் ஆள்வினையுடையார் பற்றியும் கல்வி கேள்வியுடையார் குறிப்பறியும் திறன் உடையார் பற்றியும் கூறிடக் காண்க. இறுதியில் மனிதன் தெய்வநிலை பெற்றுச் சிறக்க வேண்டும் என்றும் கூறிடக் காணலாம்.

**மாந்த நேயம் கூறும் குறட்பாக்கள் :**

மாந்தர் மாந்தராக விளங்கவே திருக்குறள் படைக்கப்பட்டது என்பது உண்மை என உலக அறிஞர்கள் யாவரும் ஒப்புவர். திருக்குறளின் நோக்கம் ஒவ்வொரு மனிதனும் அறவோனாகித் தெய்வநிலை பெற்று இயற்கை இன்பமுடன் வாழ்தல் வேண்டும் என்பதேயாம். திருக்குறளின் மாந்த நேயம் பற்றி அறிவதற்கு திருக்குறள் முழுதும் சான்றாக இருப்பினும் நாம் எடுத்துக்காட்டுக்காகச் சிலவற்றைக் காண்போம். முதலில் காமத்துப்பாலில் இருந்து காண்போம். காமத்துப்பால் உயர்ந்த மாந்த நேயத்துடன் கூடியது என்பதை அறிஞர் பலரும் ஆய்ந்து கூறுவர். ஆயினும் ஒரு சில குறட்பாக்கள் மாந்த நேயத்தைக் கூறுவதைக் காமத்துப்பாலிலும் காணலாம். காட்டாக இரண்டு குறட்பாக்களைக் காண்க.

அவையாவன் :

*1. தம்இல் இருந்து தமதுபாத்து உண்டு அற்றால்*
*அம்மா அரிவை முயக்கு (1107)*
*2. மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்*
*செவ்வி தலைப்படுவார் (1289)* என்பதாகும்.

முதல் குறளில் திருவள்ளுவர் மாந்தன் தாம் பெற்ற இன்பம் சமுதாயம் தந்தது என்று உணர்வதாகும். சிறந்த மாந்தநேயம் உடையார்க்கே இந்த எண்ணம் தோன்றும். மாந்தனைச் சமூகத்தின் உறுப்பினன் ஆக்கிக் காணும் குறள் அக்குறளாகும். அதனால் மாந்தன் தான் சமூகத்தின் ஓர் அங்கம் என்று உணர்வான். சிறந்த மாந்த நேயம் பெறுவான். இரண்டாம் குறள் மாந்தருள் ஒருசிலர் மட்டுமே காமத்தின் பதம் அறிவர் என்று கூறிடக் காண்க. மலரினும் மெல்லிது காமம் என்று வள்ளுவர் கூறும் திறம் காண்க. அதனை உணர்ந்தோர் மாந்தருள் மிக்க சிலர் என்று

உணர்த்துவதையும் காண்க. எனவே காமத்துப்பாலின் நோக்கம் பிற மொழியாளர் கூறுவது போன்று காமச் சேற்றில் புரள்வது அன்று. மாந்தன் சிறந்த மாந்த நேயமுடன் தன் மனைவியை நடத்தும் பாங்கே என்பது புரியும். எனவே காமத்துப்பால் சிறந்த மாந்த நேயத்தைக் கூறிடக் காணலாம். அடுத்து வரும் அறம்பொருளில் அனைத்துக் குறளும் மாந்தநேயம் கூறுவன என்றாலும் மிகச்சிலவற்றைக் காண்போம்.

*ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான், மற்றையான்*
*செத்தாருள் வைக்கப் படும்* (214)

என்ற குறளைக் காண்க. இக்குறளில் மாந்தன் அனைவருக்கும் இன்பம் துன்பம் யாவும் பொது என்று உணர்தல் வேண்டும். அனைத்தும் இயற்கை தந்த செல்வம் யாவும் பொது என்றும் உணர்தல் வேண்டும். மேலும் "ஒத்தது" என்பதற்கு அறிவுக்குப் புலனாகும் பொருள் விரியக் காண்க. எனவே யாவரும் எல்லாம் பெற்று இன்பத்தில் திளைக்கச் சமூகக் கட்டமைப்பு வேண்டும் என்று திருக்குறள் கூறிடக் காண்க. மேலும் அந்த மாந்த நேயம் இல்லாதான் "பிணம்" என்றும் கூறிடக் காண்க.

மேலும் வாழ்வின் நோக்கம், பயன் புகழ் என்பதாகும். இதனைத் திருவள்ளுவர் "புகழ்பட வாழாதார் தம் நோவர்" (237) என்று கூறிடக் காணலாம். எனவே தம்மை நோவாது பிறரை நோவதால் பயன்ஏதும் இல்லை என்று கூறிடக் காண்க. மிகச் சிறந்த மாந்தநேயக் குறளாக விளங்குவது,

அருள்இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி ஆங்கு (247) என்பதாகும். இக்குறளில் அன்பின் முதிர்வு அருள் என்பதை நிறுவக் காண்க. மேலும் அவரே அன்புடைமை பற்றிக் கூறும்போது,

"அன்பு இலார் எல்லாம் தமக்குரியர்" (72)

என்று கூறும் திறம் காண்க. அன்பே சிவம் என்பதை இக்குறளைவிடச் சிறப்பாக யாரும் கூறிடமுடியாது. எனவே சிறந்த மாந்த நேயத்தை வெளிப்படுத்தும் குறளாக இக்குறள் அமையக் காண்க. நிறைவாக,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்" (50)

என்று கூறிடக் காணலாம். எனவே மாந்த நேயம் என்பது சிறந்த

மாந்தர்களை உருவாக்கி, அவர்களைத் தெய்வநிலை பெறச் செய்வது என்பதாகும். மேலும் பெண்ணியம் பற்றிய கருத்துக்கள் இன்று வளம்பெற்று வருகின்றன. திருவள்ளுவர் கூட "பெண்ணிற் பெருந்தக்கது யாவுள" (54) என்று கேட்டு "பெண்ணிற் பெருந்தக்கது இல்" என்று கூறிடக் காண்க. மனிதகுலத்தில் சரிபாதியாக உள்ள பெண்களைச் சிறுமைப்படுத்துவதாகப் பெண்வழிச் சேறல் உள்ளது என்பர். உண்மையில் அது ஆண்களுக்குக் கூறும் அறிவுரையாகும். ஆண்களை மயக்கும் பெண்களையே அதில் குறிப்பிடுகின்றார் என்பதையும் நாம் அறிதல் வேண்டும். எனவே மக்கள்தொகையில் சரிபாதியாகவுள்ள பெண்களைப் பெருமைப்படுத்தும் திருவள்ளுவரை அறிதல் வேண்டும். எனவே மாந்தநேயர் திருவள்ளுவர் என்பதை அறியப் பண்புடைமை, ஆள்வினையுடைமை, குறிப்பறிதல், குடிமை, குடிசெயல்வகை முதலான அதிகாரங்களை முற்றிலும் அறிதல் வேண்டும். எனவே திருக்குறள் சிறந்த மாந்தநேய நூல் என்பது உறுதிப்படும்.

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

# பூவும் நாரும் – 24

(சாமி. தியாகராாசன்)

## ஞான சமாதி கூடியது

14.04.1995-இல் வருடத்தமிழ்ப் புத்தாண்டுப் பிறந்தது. எனது இல்லத்தில் சித்திரை முதல் நாளை வரவேற்று வழக்கம் போல் கொண்டாடினோம். அடுத்த நாள் எப்போதும் போல் கழிந்தது. அதற்கு அடுத்த நாள் 16.04.95 அன்று காலை 6.00 மணியிருக்கும். குன்றக்குடியிலிருந்து மடத்துப்பிள்ளை திரு. சிங்காரம் சொல்லிய செய்தி எனது நெஞ்சில் இடியென இறங்கி நிலைகுலையச் செய்துவிட்டது. தொலைப்பேசியைக் கீழே வைக்காமல் அப்படியே நின்ற என்னிடம் என்ன செய்தி ஏன் அப்படியே நிற்கிறீர்கள் என என் மனைவி கேட்டபின்னரே சுயநினைவுக்கு வந்தேன்.

நமது சாமி நேற்று இரவு (15.04.95) மதுரை மீனாட்சி மருத்துவமனையிலிருந்தபடியே காலமாகிவிட்டார்களாம், இன்று மாலை நல்லடக்கம் என்றேன். ஐயோ! "நம் தெய்வம் போய்விட்டதா? உங்கள் உயிரைக் காப்பாற்ற அந்தத் தெய்வம் பட்ட பாட்டை நான் பார்த்தவளாயிற்றே" எனப் பலப் பல சொல்லிப் புலம்பத் தொடங்கிவிட்டார்கள். எனது குடும்பத்தினரிடம் சாமி கொண்டிருந்த அன்பை நேரில் அனுபவித்தவராயிற்றே என் மனைவி.

ஒரு வைகாசித் திருநாளன்று என் மனைவியுடன் குன்றக்குடிக்குச் சென்றிருந்தேன். அத்திருநாளன்று சண்முகநாதன் மலைக்கோயிலிலிருந்து எழுந்தருளி வீதி உலாவரும் காலத்தில், குன்றக்குடி ஆதீன மடத்தின் வாயிலில் மங்கல மகளிர் கூடி நின்று பெருமானை வரவேற்கும் வைபவம் நிகழ்வுறும். காணவேண்டிய காட்சி அது.

அந்த வைபவத்திற்காக திருமடத்திற்கு வேண்டிய அன்பர்கள் குடும்பத்துடன் வந்திருந்தனர். உள்ளூர் மகளிரும் இருந்தனர். நின்றிருந்த பெண்மணிகளின் கைககளில் மங்கலப் பொருட்கள்

வைக்கப்பட்டிருந்த தட்டுகள் கொடுக்கப்பட்டன. அவற்றை அவர்கள் பெற்றுக்கொண்டு நின்றனர். அவர்களுடன் என் மனைவியும் இருந்தார்.

சாமி மேலேயிருந்து கீழேவந்து காளத்திநாதனை வழிபாடு செய்துகொண்டு, திருமடத்து முகப்பிற்கு வந்தார்கள். நின்றிருந்த கூட்டத்தினரோடு எங்களையும் பார்த்தார்கள். முருகப்பெருமான் திருமடத்து வாயிலுக்கு எழுந்தருளும் காலம் நெருங்கியது. அப்போது சாமி என் மனைவியை அழைத்து அவர்களது திருக்கரத்தால் வரிசைத் தட்டை என் மனைவியிடம் தந்து மகளிர் நிற்கும் வரிசையில் முதலில் நிற்கச் செய்து பெருமானை வரவேற்கச் செய்தார்கள்.

அன்று நடந்த அந்த நிகழ்ச்சியைச் சொல்லிச் சொல்லி என் மனைவி புலம்பி நிற்க, அப்போது எஸ்.கே. என்னைத் தொடர்பு கொண்டு செய்தியைச் சொன்னார். ஒன்பது மணிக்குமேல் நாம் குன்றக்குடி செல்வோம், நீங்கள் தாராசுரத்தில் உங்கள் நண்பர் கடையில் காத்திருங்கள் எனச் சொல்லிவிட்டுக் குன்றக்குடி செல்ல காருக்கு ஏற்பாடு செய்தேன்.

ஒன்பது மணிக்கு மனைவியுடன் புறப்பட்டு இடையில் தாராசுரத்தில் காத்திருந்த எஸ்.கே. திருமதி. இராசாத்தி ஆகியோரையும் அழைத்துக் கொண்டு குன்றக்குடி சேர்ந்தேன். செல்லும் வழியில் சாமியின் அருமை பெருமைகளை அவரவர் அறிந்து அனுபவித்த விதத்தைப் பேசிக்கொண்டே சென்றோம்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45-ஆம் பட்டத்திற்கேற்ப ஆதீனகர்த்தராக சாமி அமர்ந்த பின்னர், ஆண்டு தோறும் நடைபெறும் குருபூஜையன்று சாமி கொலுவிருந்து அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கும் கொலுமண்டபத்தில் அவர்களது திருமேனி உட்கார்ந்த நிலையில் வைக்கப்பட்டிருந்தது.

சாமியை அந்த நிலையில் பார்த்த அடியவன் மனநிலையை எப்படி எழுத முடியும்? எண்ணத்திலும் எழுத்திலும் அடங்காத உணர்ச்சிக் கலவை அது. அழுதேன்! அழுதேன்! அழுதேன்!

அதைத்தான் இப்போதும் என்னால் எழுதமுடியும். வேறு எழுத இயலாது.

கொண்டு சென்றிருந்த பூமாலையை அவர்கள் திருமேனி மீது அணிவித்து வழிபட்டு பக்கத்து அறையில் சோகமே உருக்கொண்டு அமர்ந்திருந்த இளவரசு அவர்களைச் சென்று கண்டேன். அவர்களின் திருக்கரம் பற்றிய நான் எவ்வாறு ஆறுதல் சொல்லமுடியும்? அங்கேயும் அழுகையே! என்னைக் கண்டவுடன் இளவரசும் கண்ணீர் விட்டார்கள். ஏதும் பேசஇயலாத நிலையில் அவர்கள் பக்கத்தில் நாங்கள் அமர்ந்தோம்.

நல்லடக்கத்திற்கான ஏற்பாடுகள் நடைபெற்றன. பல திக்குகளிலிருந்து பல அன்பர்கள் பல நிலையினர் வந்து குழுமியிருந்தனர். பொதுவாக ஓர் ஆதீனத்தலைவர் பரிபூரணமான நிலையில் அவரது அடக்கத்திற்கு மற்றொரு ஆதீனகர்த்தர் நேரில் வந்து கலந்து கொள்வது வழக்கமில்லை. இன்பமும் துன்பமும் ஒன்றே என்றும், அவையிரண்டும் சமநிலையில் வைக்கப்படவேண்டியவை என்றும், அவைகள் ஒரு துறவியை எந்த விதத்திலும் பாதிக்கக்கூடா என்றும் மேற்கொள்ளப்பட்ட கொள்கையில் அந்த நடைமுறை பின்பற்றப்படுகிறது.

இந்த நடைமுறையினை, மரபினை மாற்றி தருமபுரம் ஆதீனம் தாமே குன்றக்குடிக்கு எழுந்தருளி நமது சாமியின் அடக்கத்தினை முன்னின்று நடத்தினார்கள் எனில், சாமியின் பெருமையை மேலும் பேசவேண்டுமோ?

குன்றக்குடி ஆதீனகர்த்தரின் பட்டணப்பிரவேசத்திற்கென இருந்த பல்லக்கில் அமர்ந்து நமது சாமி பட்டணப் பிரவேசம் செய்ததில்லை. சாமியின் இந்தச் செயலால் மற்ற ஆதீனங்களிலும் இந்த நடைமுறை மெதுவாக வழக்கொழிந்தது. சாமி பயன்படுத்தாத அந்தப் பல்லக்கு அவர்களது இறுதிப் பயணத்திற்குப் பயன்பட்டதால் அது பாக்கியம் பெற்றது. இரவு எட்டு மணியளவில் இளவரசு பொன்னம்பல அடிகளார் சடங்குகளை நிறைவேற்ற நமது சாமி ஞானசமாதி கூடினார்கள்.

– தொடரும்

# புண்ணியன் வாழ்க நன்றே...!

**(குமரி அமுதன்)**

கோபுரம் போல் உயர்ந்த
"குன்றக்குடி அடிகளார்" தம்
மாபெரும் கீர்த்தி யெல்லாம்
மன்பதை அறியும் வண்ணம்
ஓர்அரும் நூலாய்த் தந்தே
உள்ளத்தை நெகிழச் செய்தார்,
சீர்பெறும் சிந்தையாலே
திரு சாமி. தியாகராசன்....!

பூவுடன் நாரும் சேர்ந்து
பொலிவுறும் தன்மை போல,
"நாவினில் வல்லார், ஆன்ம
ஞானியாம் அடிக"ளோடு
மேவிய உறவினாலே
மேன்மையாய் இந்த நூலைக்
காவியம் போல் படைத்தார்
கனித்தமிழ்த் தியாகராசன்!

நாவலின் சுவையோ டிந்த
நல்லநூல் நான் படித்தேன்;
ஆவலைத் தூண்டும் வண்ணம்
ஆக்கிய "பூவும் நாரும்"
கோவில்கள் பற்றி நன்றாய்க்
கூறிடும் செய்தி யெல்லாம்
மாவிலைத் தோரணம் போல்
மங்கலம் திகழ்வ தன்றோ!

குருசாமி அடிகளார் தம்
குணநலன், பண்பை, அன்பர்
"திருசாமி. தியாகராசன்"
தெளிவுறக் காட்டும் இந்நூல்
வருநாளில் "அடிகள்" வாழ்க்கை
வரலாறாய் உயிர்த்திருக்கும்!
ஒருநாளும் மறக்க வொண்ணா
ஒரு நூலாய்ப் பயன்சிறக்கும்!

நோய் நிலை கொண்டு நூலோர்
நோவுடன் துடித்த வேளை
தாய்தலை அன்பு காட்டித்
"தவத்திரு அடிகள்" ஆங்கே
வாய்மொழி வார்த்தை யாலும்
வருகையின் கருணை யாலும்
சேய்என இவர்பால் கொண்ட
சிந்தையை என்ன வென்போம்!

அத்தகு "அடிகள்" தம்மை
அன்பெனும் நாரால் கட்டி
வித்தகர் தமது நெஞ்சில்
விரிந்திடும் மலராய்க் கொண்டே
நித்தமும் உருகி நிற்கும்
நிலையினைப் "பூவும் நாரும்"
புத்தகம் புகலக் கண்டோம்;
"புண்ணியன் வாழ்க நன்றே....!"

## பேராசிரியர் சி. நயினார்முகமது மறைவு

திருச்சிராப்பள்ளி ஜமால் முகமது கல்லூரியின் முன்னாள் முதல்வர்.பேராசிரியர்.தமிழறிஞர். சி. நயினார் முகமது அவர்கள் 23.07.2014 அன்று இரவு அமெரிக்காவின் டெக்சாஸ் மாகாணத்தில் தனது மகள் இல்லத்தில் காலமானார்.

பேராசிரியர் சி. நயினார் தமிழ்மொழிமீது தீராக் காதல் கொண்டவர். அருள்நெறித்தந்தையவர்கள் தோற்றுவித்த உலகத் திருக்குறள் பேரவையின் அறிஞர்குழுவில் ஒருவராகத் திகழ்ந்தவர். அருள்நெறித் தந்தையவர்களால் பறம்புமலை வள்ளல் பாரிவிழாவில் "பெரும்புலவர்" பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றவர். இத்தகைய தமிழறிஞரின் மறைவு குறித்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது.

இப்பெருமகனாரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறது. தமிழறிஞர் சி. நயினார் முகம்மது அவர்களின் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறது.

# சிறப்பாசிரியருக்கு வந்த கடிதங்கள்

வழிபாட்டுக்கும் போற்றுதலுக்கும் உரிய அடிகளாரின் திருவடிகட்கு வணக்கம்... வாழ்க பல்லாண்டு....

7-ஆம் நூற்றாண்டு அப்பரின் திருவாக்கு; "என் கடன் பணிசெய்து கிடப்பதே"

20-ஆம் நூற்றாண்டு அப்பரின் அருள்வாக்கு; "வாழ்க்கை உனக்கானதல்ல; உலகத்திற்கானது"

- இவ்விரு கொள்கைகளையும் இருவிழிகளாகக் கொண்டு நம் அடிகளார் நடத்திவரும் பயணத்தில் - தன் வாழ்வில் பொன்விழா ஆண்டினையும், பொதுவாழ்வில் 21-ஆம் ஆண்டினையும் நிறைவு செய்து, நூற்றாண்டு விழா நோக்கி இயங்கும் பாதையில் - வெளிவந்துள்ள உணர்வுப்பூர்வமான கட்டுரை, என் நெஞ்சத்தை நெகிழச் செய்தது.

அருள்நெறித் தந்தையின் வழித்தடத்தில் அடிகளார் நடந்த பயணங்களின் நிகழ்ச்சிகள், நம் ஈர விழித்திரையில் மீள்காட்சிகளாக வலம் வருகின்றன.

மனிதர், தம் அறியாமையால் உருவாக்கிய அழிவுகளையும், இயற்கை, தன் சீற்றத்தால் ஏற்படுத்திய அழிவுகளையும், ஓர் அருளாளராக எதிர்கொண்டு, மன்பதையின் துயர் துடைத்த பணி, தேசிய விருதுபெற்ற "குன்றக்குடி வழி"க்கு உரியது.

தாரணிகா என்ற மழலையின் தியாக உள்ளம், நம்மை மெய்சிலிர்க்கச் செய்கிறது.

"ஊரில் ஒரு மயானம் இருக்கும்.... சுனாமிப் பகுதிகளில் ஊர்களே மயானங்களாயிருந்தன" என்ற தொடர், அவலத்தின் உச்சம்.

"மனிதர்களே! மனிதர்களே!
மரணத்திற்கு இந்து இல்லை.
மரணத்திற்கு இஸ்லாமியன் இல்லை
மரணத்திற்குக் கிறித்துவன் இல்லை
மரணம் எப்படி சகலருக்கும் பொதுவானதோ, அதைப்போல
வாழும் காலத்தில், பொதுமையாய் வாழ்ந்து காட்டுங்கள்!"

என்னும் ஆழிப்பேரலைகளின் அறிவுரை, ஆழிசூழ் உலகத்தார்க்கு ஒரு பாடம்.

அருள்நெறித்தந்தையின் அருள் தடத்தில் அடிகளார் மேற்கொண்ட பயணத்தின் நிகழ்வுகளை நான் தரிசித்தபோது, என் இதயத்தை நெகிழச் செய்த மற்றொரு சால்பு – தம் பணிகளின்போது உடன்நின்ற சான்றோர்கள், தொண்டர்கள் ஆகியோர்களின் பெயர்களைத் துல்லியமாக நினைவு கூர்ந்து குறிப்பிட்டுப் பாராட்டியுள்ள மனித நேய மாண்பு, நம் உள்ளத்தில் ஆழமாகப் பதிகிறது. இஃது ஒரு வாழ்க்கை மீள்பார்வை மட்டுமல்ல. ஒரு வரலாற்று ஆவணமும் கூட...

அனைத்திந்தியக் கல்வி மற்றும் வளர்ச்சிக் குழுவின் ஸ்ரீ மகாத்மா ஜோதி ராவ் பூலேய் விருது, அடிகளாரைத் தேடிவந்து சிறப்புப் பெற்ற செய்தி கண்டு மகிழ்ந்தேன். இதுபோல், மேலும் பல விருதுகள், “அசைவிலா அருள் உடையார் உழை, அதர்வினாய்ச் செல்லும்” என்ற நம்பிக்கையுடன் போற்றி வாழ்த்தி வணங்குகிறேன்.

தங்கள் அன்பு மறவாத
– அய்க்கண்

மரியாதைக்குரிய மகாசன்னிதானம் அவர்களுக்கு வணக்கம்.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு மக்கள் சிந்தனை கிடைக்கப் பெற்றேன்.

இதழைப் பெற்றவுடன் எப்போதுமே உங்கள் தலையங்கத்தைப் படித்துவிட்டுத்தான் அடுத்த வேலையைத் தொடங்குவேன்.

எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. ஒன்று காமராஜர் அவர்களின் ஏழைப் பங்காளனின் பிறந்த நாள். தன்னலமற்றவர்.

இரண்டாவது 24.05.2014ல் தங்கள் மனிதநேயத்துக்கான விருது.

நான் மூன்று மகாத்மாக்களை அறிவேன். ஒன்று உங்களுக்கு அளித்த விருதின் பெயரிலுள்ளவர். இரண்டாவது வடநாட்டுப் பெண் ஒருவர். மூன்றாவது நம்நாட்டின் தேசத் தந்தை காந்தியடிகள். தன்னைவிட பெண் மகாத்மா சிறந்தவர் என்று காந்தியடிகளே கூறி இருக்கின்றார்.

மாமன்னர்களுக்கு மட்டுமல்ல சாமான்யர்களுக்கும் வரலாறு உண்டு என்று முற்காலத்தில் திருவள்ளுவரும், பிற்காலத்தில் கார்ல் மார்க்ஸும் உணர்த்தியுள்ளனர். பொதுவுடைமைத் தத்துவம்

தோன்றுவதற்கு ஒரு சாமான்யருக்கு ஏற்பட்ட துன்ப நிகழ்ச்சிதான் அதுவும் மார்க்ஸ் பேருந்தில் பயணம் செய்ய முற்பட்டபோதுதான்.

தமிழர்கள் முரடர்களாக முரட்டுத்தனமுள்ளவர்களாக இருக்கலாம் ஆனால் கயவர்களல்ல. ஆக்கப்பட்டார்கள்.

உங்கள் எழுத்துக்களிலே ஓர் உண்மையிருக்கும். மனதைத் தொடும்படியான நிகழ்ச்சி இருக்கும். பாதை வேறாக இருக்கலாம். இலக்கு மனித நேயம்தான். அதிலும் நான் மருத்துவப் பணியிலிருப்பதால் என்னுடைய ஆசான்கள் என் மனதை நன்றாகச் செதுக்கிவிட்டார்கள். குழந்தை தாரணிகா, டாக்டர். பாலகிருஷ்ணன் ஆகியோருடைய சொல்லும் செயலும் மனிதகுலத்திற்கு இலக்கணமாக அமைந்துள்ளது.

உங்களுக்குக் கிடைத்த விருது அரசியல் நோக்கமற்றது. உங்கள் தொண்டுக்குக் கிடைத்த மரியாதை. எனக்கு மிகவும் மகிழ்ச்சியாயிருந்தது. ஒரு முன்மாதிரியாக இருந்தது. வானிலுள்ள நட்சத்திரங்களைப் போன்று தொண்டறம் செய்ய மனதார வேண்டுகிறேன்.

எனக்கு உங்கள் எழுத்தைப் பார்க்காமல் ஏதோ இழந்ததைப் போல் தோன்றுகிறது.

உண்மையுள்ள
- டாக்டர். அ. உசேன் மஸ்தான்

தவத்திரு அடிகளார் அவர்களுக்கு, பணிவான வணக்கம்! "மக்கள் சிந்தனை" இதழ் வாயிலாக அன்பர்கள் அருள்திரு மகாத்மா சோதிராவ் புலேய் விருது வழங்கிச் சிறப்பித்த நிகழ்வையும் செய்திப் படங்களையும் கண்டேன்; நெஞ்சமெல்லாம் இனித்தது. ஏதோ இனந்தெரியாத மகிழ்வு என்னுள் தோன்றியது. இவ்வாண்டில் நானடைந்த பெருமகிழ்வில் குறிப்பிட்டுக் கூறிடும்படியான இன்பம் தரும் நிகழ்வு; பெருமிதம் கொள்கின்றேன்.

தங்கள் திருவருளை வேண்டும்
மா. கந்தசாமி

பெருமதிப்பிற்குரிய சுவாமிகளை பணிவோடு வணங்கி எழுதுவது. குருமகாசன்னிதானத்துக்கு மகாத்மா ஜோதிராவ் பூலேய் விருது கிடைத்தமை குறித்து பெரிதும் மகிழ்கின்றேன்.

- இப்படிக்கு
க. இராஜேந்திரன், தருமபுர ஆதீனம் மடம்.

# மலேசியா நாடு - கோலாலம்பூரில் உலகத் திருக்குறள் பேரவைத் தொடக்கம்



திருக்குறள் செம்மல் திரு.ந. மணிமொழியன் உலகத் திருக்குறள் பேரவையின் மலேசியாக் கிளையினைத் தொடங்கிவைத்துச் சிறப்புரையாற்றினார்.

மலேசியா நாட்டின் கோலாலம்பூரில் உலகத் திருக்குறள் பேரவைக் கிளை 28.06.2014 அன்று கோலாலம்பூர் டான்ஸ்ரீ சோமா அரங்கத்தில் தொடங்கிவைக்கப்பட்டது. தொடக்கவிழா ஏற்பாட்டினை மலேசிய டாக்டர். திரு.ஆர். சிற்றரசு சிறப்பாக செய்திருந்தார். விழாவிற்கு மலேசியா சுகாதாரத்துறை முன்னாள் துணை அமைச்சர் டான்ஸ்ரீகுமரன் தலைமை தாங்கினார். பேரவையின் கிளையினைத் தொடங்கிவைத்து தமிழ்நாடு உலகத் திருக்குறள் பேரவை முதன்மைப் பொதுச்செயலாளர் திருக்குறள் செம்மல் திரு.ந.மணிமொழியன் சிறப்புரை நிகழ்த்தினார். நிகழ்ச்சியில் மலேசிய இந்து சங்கத் தலைவர் டத்தோ.ஆர்.எஸ்.மோகன், முன்னாள் தலைவர் டத்தோ என். வைத்திலிங்கம் தொழிலதிபர் கண்ணு சிவக்குமார் தமிழ்நாடு பட்டிமன்றப் பேச்சாளர்கள் கவிஞர் மார்சல் முருகன், கவிபாரதி அசோக்ராஜ் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். நிகழ்ச்சியில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் அனுப்பிய வாழ்த்துச் செய்தி வாசிக்கப்பட்டது. திரு. மூர்த்தி நன்றி கூறினார்.

திருக்குறள் செம்மல் திரு.ந. மணிமொழியன் தனது சிறப்புரையில் மலேசியா நாட்டில் உலகத் திருக்குறள் பேரவையின் கிளையினைத் தொடங்கி வைப்பதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன். உலக மகா கவிஞர் திருவள்ளுவர் என மேல்நாட்டு அறிஞர் ஜி.யு.போப் அவர்களால் போற்றப்பட்ட திருவள்ளுவரின் திருக்குறள் ஒரு மொழிக்கோ, ஒரு நாட்டுக்கோ, ஒரு இனத்துக்கோ ஒரு சமயத்திற்கோ சொந்தமென இல்லாமல் உலக மக்கள் அனைவருக்கும் பொதுவானதொரு பொதுமறை.

திருக்குறள் ஒரு வாழ்வியல் இலக்கண நூல். உலக மொழிகளில் அதிகம் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களில் இரண்டாவது இடத்தைப் பெற்றது என்பதில் நமக்குப் பெருமையுண்டு. திருமால் மூன்று அடிகளால் மூவுலகை அளந்தார்.

திருவள்ளுவர் பாவடிகள் இரண்டால் மனித மனங்களை அளந்தார். திருமால் புறஉலகையும், அகவுலகையும் அளந்தவர். திருவள்ளுவர் அகவுலகை அளந்தவர்.

தமிழ் மொழியையும் தமிழர்களையும் உலகிற்கு அடையாளம் காட்டி முகவரி தந்தது திருக்குறள். தமிழ் மொழியைப் போற்றிப் பாதுகாப்பதில் முதன்மை பெற்றவர்களாக வெளிநாட்டுத் தமிழர்கள் விளங்குகிறார்கள். அதனால்தான் தமிழ்மொழி உலகமெல்லாம் சிறந்து உயர்ந்து நிற்கிறது. அதில் குறிப்பாக மலேசியா தமிழ் மக்களுக்கு பெரும் பங்குண்டு.

இந்நாட்டில் உலகத் திருக்குறள் பேரவையின் கிளை தொடங்குவது பெரும் மகிழ்ச்சியளிக்கிறது.

மகாசன்னிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களால் தொடங்கப்பட்டு தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களின் தலைமையில் உலகத் திருக்குறள் பேரவை, செயல்பட்டு வருகிறது. இப்பேரவை உலகம் முழுவதும் தொடங்கப்பட்டு, செயல்வடிவம் பெற வேண்டும் என்பது எனது பேரவா. சென்ற ஆண்டு லண்டன் மாநகரிலும், பாரீஸ் நாட்டிலும் தொடங்கிவைக்கும் வாய்ப்பினை அங்குவாழும் தமிழறிஞர்களின் முயற்சியால் பெற்றேன். அதனைத் தொடர்ந்து இந்த ஆண்டு (2014) மலேசியா நாட்டில் தொடங்கிவைக்கும்

வாய்ப்பு இங்குள்ள தமிழறிஞர்களின் ஆர்வத்தினால் கிடைத்துள்ளது. அதற்கு பேரவைத் தலைவர் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களுக்கும் மலேசியக் கிளை அமைப்புக் குழுத்தலைவர் டாக்டர்.சிற்றரசு அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

உலகத் திருக்குறள் பேரவை அமைப்பதின் மூலமும் அதன் செயற்பாட்டின் மூலமும் மனிதநேயமும் அன்பும், ஒற்றுமையும், செறிவான வாழ்க்கை நெறியினையும் உலகமக்கள் அனைவரும் பெற்றிட வேண்டும். இளைஞர்கள், மாணவர்கள், மகளிர் அனைவரிடமும் திருக்குறள் ஒரு வாழ்வியல் நூல். மனித மனங்களை பண்படுத்தும்; வாழ்க்கையினைச் செழிப்படையச் செய்யும்; வையத்தின் வாழ்வாங்கு வாழ வழி காட்டும்; வையகம் செழிக்கச் செய்யும் நூல் என்ற பேருண்மைகளை மக்கள் மனங்களில் பதியவைக்கும் அறிவுக்களமாக மலேசியா பேரவைக்கிளை செயலாற்றி முதன்மைப் பெற வேண்டுமென வாழ்த்தி மகிழ்கிறேன்.

## சிந்தனை வட்டம்

மக்கள் சிந்தனையில் "ஊர் நாய் வளர்ப்பு நாய்" பற்றிய விளக்கம் நுண்மையானது. வரலாற்றின்படி நாய்தான் முதன் முதலில் வளர்க்கப்படுகிறது. இஸ்லாமியக் கோட்பாட்டின்படி நாய் வளர்ப்பது தடை செய்யப்பட்டுள்ளது.

அறிவியல் வழியாக RABITS என்னும் உயிர்க்கொல்லி நோய், மனிதனுக்கும் மற்ற உயிரினங்களுக்கும் ஊர்நாய்க்கடியின் மூலமாக ஏற்படுகிறது. AIDS என்னும் மாந்தனைப் பாதிக்கும் நோயும் ஊர் நாய்த்தன்மை போலவே.

ஆக மனித சமூகம் எவ்வளவு கவனமாகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டுமென்று திருவாசகம் கூறியிருப்பது ஓர் அருமையான அறிவியல் செய்தி.

திருக்குறள் மெய்யியல் வகை ஆராய்ச்சிக் கட்டுரையாக உள்ளது.

அருள்நெறித் தந்தையின் கட்டம் போட்ட பெட்டிச் செய்திகள் வெளிச்சத்தைத் தருகின்றன. "மக்கள் சிந்தனை" மக்கள் சிந்தனையைத் தூண்டுகிறது.

- அ. உசேன் மஸ்தான்

# கவிதை எழுதும் பேராசிரியர் : சேதுபதி

கவிஞர் சிற்பி

பேராசிரியர்களில் கவிதை எழுதுபவர்களும் உண்டு. அப்துல் ரகுமான், தமிழன்பன், பாலா, இப்படி இவர்களெல்லாம் பேராசிரியர் ஆவதற்கு முன்பே கவிஞர்களாய் அடையாளம் குறித்தவர்கள். பேராசிரியர்களென்றால் கவிதை எழுதவும் வேண்டும் என்று நினைத்து எழுதியவர்களும் உண்டு. மு.வ. தெ.பொ.மீ, போல. ஆனால் இவர்கள் எழுதியது கவிதையாகவும் இல்லை. வெற்றி பெறவும் இல்லை. இதனால் பொத்தாம் பொதுவாகப் பேராசிரியர்களெல்லாம் கவியெழுத வந்துவிட்டார்கள் என்று பொதுப்பணித்துறை, வங்கி, தனியார் நிறுவனங்களில் பணிபுரிந்துகொண்டே கவிதை படைத்தவர்கள் குறிவைத்துத் தாக்கினார்கள். ஆனால் உண்மை என்னவோ இதன் நடுவில் இருக்கிறது. யார் வேண்டுமானாலும் இலக்கியம் படைக்கலாம். படைப்பு தரமாக இருக்கிறதா என்பதுதான் அளவுகோல். இந்த அளவுகோல் பேராசிரியர் சேதுபதியைக் கவிஞர் தான் என்று கச்சிதமாக நிறுவுவதில் வெற்றி பெற்றிருக்கிறது.

பேராசிரியர் சேதுபதிக்கு வயது 44. ஆனால், அவர் எழுதிய நூல்கள் வயதோடு ஆரோக்கியமான போட்டிக்கு முயல்கின்றன. கவிதை, நாடகம், சிறுவர் இலக்கியம், சிறுகதை, ஆய்வு, வரலாறு, கட்டுரை நூல்கள் நாற்பத்தொன்று. தொகுப்பு நூல்கள் பதின்மூன்று என ஐம்பதுக்கும் மேற்பட்ட நூல்களின் அணிவரிசை களம் கண்டு உளம் வென்று நிற்கின்றன.

ஆயினும் இவருடைய வலிமையைக் காத்து நிற்பவை கவிதை நூல்களும், பாரதி – கம்பன் குறித்த ஆய்வு நூல்களும்தான் என்று எளிதாகக் கூறிவிட முடியும். மனம் கவரும் உரையாளர் என்பது இவருடைய இன்னொரு இனிய பரிமாணம்.

பாரதியாரைச் சொற்பொழிவாளராக இனம் கண்ட குறிப்புகளும் அரவிந்தரோடு இணைகாணும் ஆய்வுகளும், பாரதி தேடலில் சில மின்னற் பொறிகளும் சேதுபதியின் ஆய்வும் பெருமைக்கும் கூரிய பார்வைக்கும் அடையாளங்கள் எனலாம். கம்பன் கழக நெருக்கத்தால் கம்ப இலக்கியத்தையும் கடைந்து மணிகளைச் செதுக்கும் வித்தகராக இவர் விளங்கி வருவது கண்கூடு.

குன்றக்குடியும், காரைக்குடியும் ஊட்டி வளர்த்த தமிழும், எட்டையபுரமும், வேதபுரமும் கொட்டிக் கொடுத்த கவிதையும் சேதுபதியின் ஆளுமைப்பதிவுகள்.

மானுட வாழ்க்கையின் அதீதமான முரண்கள் கவிஞரைச் சலனமுற வைக்கின்றன. இந்த முரண்களை வலமும் இடமுமாகப் பின்னியபடியே வாழ்க்கை நகர்கிறது.

*வயல்களை விற்று வீடுகள்*
*வயிறுகள் விற்று வசதிகள்*
*ஆரோக்கியம் விற்று மாத்திரைப் புட்டிகளும்*
*ஆன்மாவை விற்று ஆபரணங்களும்*

பெருகிக்கொண்டே போகிற அவலம் மனதைக் கீறுகிறது. அதனால் நொந்துபோகிற கவிஞர் எழுத்தையும் சபிக்கிறார். எழுதி எழுதி என்னதான் விளைந்தது என்ற கசப்பு மேலிடுகிறது.

*என்ன சொல்லி*
*எழுதி என்ன*
*இழந்தது இழந்ததுதான்*
*போகத் தவறிய பயணம்*
*காணத்தவறிய காட்சி*
*வாழத் தவறிய வாழ்க்கை*

சற்றேறக்குறைய 29 வயதிலேயே இந்த ஞானோதயம் கவிஞருக்கு ஏற்பட்டிருப்பது வியப்பான செய்தி! இந்தப் பக்குவம் முதிர முதிர சில அபூர்வ உண்மைகளின் தரிசனம் கிடைத்துவிடுகிறது. வாழ்க்கையின் வர்ண பேதங்களின் சூட்சுமம் பிடிபடுகிறது. கவிஞர் சொல்கிறார்.

*மனமொரு பாற்கடல்*
*கடைபவர்க்கேற்ப*
*அமுதமும் விஷமும்*

பார்வை கூர்மையடையத் தொடங்கியதும் முதிர்ச்சியற்ற பிஞ்சுப் பழங்களைப் பார்த்து வருத்தமும் ஆதங்கமும் மேலிடுகின்றன. கவிக்குரல் எச்சரிக்கிறது!

*அவசரப்பட்டு பழுத்தென்ன*
*லாபம்*
*சருகானதைத் தவிர*

இந்தக் கூற்றை விரித்துக்கொண்டே போனால் ஒவ்வொரு துறையிலும் வாழ்வின் ஒவ்வொரு முகத்திலும் இதனைப் பொருத்திப் பார்க்க முடியும். தத்துவங்களாகத் துடிக்கும் சிந்தனைத் தெறிப்புகளும் கோட்பாடுகளாக முயலும் குறிப்புக்கீற்றுகளையும் சேதுபதியின் கவிதைகளில் ஏலவே காணமுடியும்.

கவிதை சிலருக்குக் கலை; சிலருக்கு முகம் பார்க்கும் பளிங்கு; சிலருக்குப் பொழுதுபோக்கு; சிலருக்கு அதுவே வாழ்க்கை. அதுவே உயிர்ப்பு. அதுவே யாவும்.

சேதுபதிக்கு அது உண்ணும் சோறு; பருகும் நீர்; தின்னும் வெற்றிலை; அதனால் எல்லாவற்றையும் கவிதையாக்கத் துடிக்கும் உணர்வு அவரிடம் குழந்தை என்ற குதூகலச் சிற்பம் முதல் மரணம் என்ற மகத்தான மௌனம் வரை அனைத்தையும் தன் கவிதைக்குள் அரவணைக்கத் துடிக்கிறார்.

குழந்தைமைக்கு ஒரு மாணிக்கத் தொட்டிலாகவே அமைகிறது அவருடைய "உயிர்மெய்"

*என்னைப்பற்றி*
*எழுதென்று வழியும்*
*பல் முளையாத*
*புன்னகை அமுது*
*என்றும்,*
*உன்னைச் சுமக்கும்*
*ஓர் கருப்பை என்னிடம்*
*இல்லாத காரணத்தால்*
*கவிதை எழுதிக் கொண்டிருக்கிறேன்*

என்று அழகொழுக உயிரோவியம் எழுதிப்பார்க்கிறார்.

*ஒரு குழந்தையின் அழுகுரலில்*
*காடு தீப்பற்றி எரிகிறது*
*ஒரு குழந்தையின் அழுகுரலில்*
*பிரபஞ்சம் சூன்யமாகிறது*

என்று உணர்வலைகளில் நீந்துகிறார். அதே சமயம் பிறப்பின் மற்றொரு எல்லையான இறப்பிலும் குவிகிறது கவிதை.

அழுபவர்களைவிடவும்
அமைதியாய் நடப்போரின்
அழுக்கத்தில்
கனக்கத்தான் செய்கிறது
இறந்தவரின் உடம்பைவிடவும்
இருந்தவ வாழ்க்கை

காதலும் மோதலும் கனவும் விழிப்பும் கண்ணாமூச்சி ஆடுகின்ற அழகையெல்லாம் நூற்றுக்கணக்கான கவிதைகளில் தேன் துளிகளைப் போல் வடித்துக் கொடுக்கிறார் சேதுபதி. காதல் மென்மையிலும் மென்மையாய் வெளிப்படும் இடங்கள் பல.

*பொய்கள் எனக்குப் பிடிக்கும் என்றாய்*
*உன்னைப் பிடித்திருக்கிறது*
*ஆனால் இது பொய்யில்லை*
*என்று குறும்பு கொப்பளிக்கப் பேசும் காதலும்,*
*பிரிவு நெருப்பானால்*
*உன்னைச் சுட வேண்டும்*
*பிரிவு நீரானால்*
*நீயும் மூழ்க வேண்டும்*
*பிரிவு விஷமானால்*
*உன்னுள்ளும் பரவவேண்டும்*
*பிரிவே நீயானால்?*

என்று மறுகித் தவிக்கும் பிரிவின் சோகமும் இரட்டைக் குழந்தைகளென நடமாடும் கவிதை உலகம் இவருடையது.

சின்னப் பொன் துகள்கள் ஆன எறும்புகள் முதல் வரப்போகும் விஞ்ஞானப் புரட்சியின் அரும்புகள் வரை விசாலித்து நிற்கிறது சேதுபதியின் கவிதை.

பட்டுப்பூச்சி தொலைத்த
நகரத்தில்
குழந்தைகளுக்குக் காட்ட
எறும்புகளாவது மிச்சமிருக்கட்டும்

என்று எழுதும் பேனா முனையிலேயே,

நதிகளைச் சலவை செய்யும்
நல்ல வாஷிங் மெஷின்
அளவாக மழை பொழிய
வளமாகக் காற்றுவரத்
தரமான ரிமோட் கண்ட்ரோல்

பற்றிய கனவும் தொற்றிக் கிடப்பது உலகளந்த பார்வையாகப் பரிணாமம் கொள்கிறது.

உவமைகளுக்குத்தான் என்ன?

*ஆயிரம் கதவு ரகசிய அரண்மனை*
*வாசலின் திறவுகோல்*

என நாவையும்,

*கிழிந்து தொங்கும் சட்டைப் பையென*

நாயின் காதையும் சித்திரப்படுத்தும் உவமை அழகே அழகு!

எழுத்து என்ற கோடுகளால் ஒரு கூட்டைச் சமைக்கவும் ஒரு கோட்டைப் படைக்கவும் வல்லவனால் முடியும். ஒரு பூவாய் விரியவும் பொன்னாய் வளையவும் முடியும்.

சேதுபதி நல்லவர் – கவிதை வல்லவர்

– 3.8.2014ல் பொள்ளாச்சியில் திரு. சொ. சேதுபதிக்கு சிற்பி இலக்கியப் பரிசு வழங்கியபோது ஆற்றிய அறிமுக உரை

நமது தலைமுறையில் நாம் கண்ட மாபெருந் தலைவர்களையடுத்து வந்த தலைமுறையினர் தலைவர்கள் பெயரை மட்டுமே உச்சரிக்கின்றனர். தலைவர்களுடைய கொள்கைகளை விட்டுவிட்டனர். தலைவர்கள் பெயரைப் பயன்படுத்துவதற்குரிய காரணம் அத் தலைவர்கள் மக்களால் அங்கீகரிக்கப்பெற்றவர்கள். அத்தலைவர்களுக்கு மக்கள் வழங்கியுள்ள அங்கீகார நிழலிலேயே வாழ ஆசைப்படுகின்றனர்.

– அருள்நெறித்தந்தை



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி, 2. அழகுக்கலை, 3.லெதர் & ரெக்ஸின் பொருட்கள் தயாரித்தல், 4. பற்றவைப்பு (ஆர்க் & கேஸ் வெல்டிங்), 5.செல்போன் பழுது நீக்குதல், 6. T.V, Radio- பழுது நீக்குதல், 7. எம்ப்ராய்டரி 8. பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், 9.வீட்டு வயரிங் வேலை செய்தல், 10. இரண்டு சக்கர வாகனம்பழுது நீக்குதல், 11. ஆபரண நகை தயாரித்தல், 12. திரை அச்சு வேலை, 13. சேலை டிசைனிங், 14. கைவினை பொருட்கள் தயாரித்தல், 15.பொம்மைகள் தயாரித்தல், 16. காகித உறை மற்றும் பைகள் தயாரித்தல், 17. வீட்டு உபயோகப்பொருட்கள் பழுது நீக்குதல், 18. உணவுப் பொருட்கள் தயாரித்தல், 19. பேப்ரிக் பெயிண்டிங், 20. சாக்பீஸ், மெழுகுவர்த்தி, பினாயில், சாம்பிராணி தயாரித்தல் 21. கயிறு திரித்தல், 22. GFRB பொருட்கள் தயாரிப்பு, 23. சேலை புதுப்பித்தல் சுருக்கம் நீக்குதல், 24. எலக்ட்ரானிக் சோக் தயாரித்தல், 25. கூடை முடைதல், 26.உல்லன் நிட்டிங் 27. நாப்கின் தயாரித்தல், 28. தையல் இயந்திரம் பழுது நீக்குதல், 29. போட்டோ லேமினேசன், 30. ஐஸ்கிரீம் தயாரித்தல் 31. காளான் வளர்ப்பு, மண்புழு உரம் தயாரித்தல்,

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

BOOK POST
Book pocket containing printed matter
Price Rs. 8-00
MAKKAL CHINTHANAI-July - Sep' 2014 Date of Publication 22-09-2014



பெறுநர்

திரு திருவருள்திரு சுவாமிகள் அவர்கள்,
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்,
மானகிரி-(அஞ்சல்),
காரைக்குடி-(வழி), அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166